உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவஞான போதம்

## சூத்திரமும் உரையும்

மன்மதஸ்ரீ ஆனிமீ 23உ

சிதம்பர க்ஷேத்திரம்

**ஸ்ரீமந் நடராஜ மூர்த்தி**

**மகாகும்பாஷேகம்**

ஞாபகார்த்த வெளியீடு

உரையாசிரியர்:

**ஸ்ரீ சிதம்பர சுவாமிகள்.**

சற்குரு விலாச மடம்

சிதம்பரம்

---

உ. தா. வெள்ளூர் கர்ணம்

திருவாளர். கீ. குமரவேல் பிள்ளையவர்கள்

வேண்டுகோளின்படி

முக்தானந்த சுவாமிகளால்

பாண்டியன் அச்சகத்தில் பதிப்பிக்கப்பெற்றது.

**1955.**

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



## விநாயகர் துதி.

நாற்கர ணங்க ளாய ௳
நன்மன மாதி தம்மை

நாற்கர மாக வுள்ள
நடுவுள துதிக்கை யாகப்

பாற்கரற் கொளிசெய் சித்தே
பண்புள வாக்கையாக் கொண்

வேற்கரன் தனக்கு மூத்தோன்
மிளிருமைங் கரன்றாள் போற்றி.

---

## சிதம்பரம்.

## ஸ்ரீ சற்குரு விலாச மடம்

# முக்தானந்த சுவாமி இயற்றியது.

### பதினாறுசீர் கழிநெடி லாசிரிய விருத்தம்.

சீர்பெருகு முற்கபுரி ஞானகுரு வாறுமுக
தேசிகன் றிருவருள் பெற்ற திலகன்
சிருபோதில் குருகுல வாசமது செய்துநற்
செப்பரிய வேதாந்த பாற்கடல் மூழ்கியே
பார்புகழ வேதினம் பலசீடர் வினவிடப்
பாங்காக பாடமுறை பகருநற் சாந்தனாய்
பக்குவர்தம் மனதிலுரு சந்தேக மதுதனைப்
பரிந்திடப் பதியுமொழி பகர்கின்ற தீரனும்
பேர்பெரு சிதம்பரத் தலமதில் வாழ்கின்ற
பெருமைபெரு சற்குரு மடாதிபதி யாகுநற்
பீடுரு சிதம்பர ஞானதே சிகனெனும்
பெயர்பிரம சர்யநற் சீலனவ னனவன்
காருலவு சோலைசூழ் கடலுலக முழுதுமே
கண்டுகற் கண்டெனக் கண்டவர்தம் மனமகிழ்
கருதரிய சிவஞான போதநூற் கோருறை
கரதலா மலகமாய்க் காணதந் தனனரோ.

---

உ

சிவமயம்.

சிவ சிவ சிவ சிவ

திருச்சிற்றம்பலம்.

# முகவுரை.

ஸ்ரீ சர்வேஸ்வரரான சிவபெருமான் வேதங்களைத் தோற்றுவித்தனர். அவை, ருக், எசுர், சாமம், அதர்வணம் என நான்கு வகைப்படும். அவற்றில் ருக் வேதம் இருபத்தொரு சாகைகளுடையது. எசுர் வேதம் நூற்றொரு சாகைகளுடையது. சாமவேதம் ஆயிரம் சாகைகளுடையது. அதர்வணவேதம் ஒன்பது சாகைகளுடையது. ஆக வேதங்கள் ஆயிரத்து நூற்று முப்பத்தொரு சாகைகளாக அமைந்துள்ளன.

அந்நான்கு வேதங்களுக்குள் ருக், எசுர், சாமம் என்னும் மூன்று வேதங்களே முக்கியமானவை. அவற்றுள் சிவபரம்பொருளின் மெய்மை விளங்க உணர்த்தும் மஹா வாக்கியத்தையும், பஞ்சாட்சர மஹாமந்திரத்தையும் தன்னகத்தே கொண்ட மத்தியிலுள்ள எசுர்வேதம் சிரேஷ்டமாகும். அவ்வெசுர் வேதத்தின் மத்தியில் உருத்திரோபநிஷத்துள்ளது. அவ்வுபநிஷத் மத்தியில் பஞ்சாட்சர மஹாமந்திரமுள்ளது. அப்பஞ்சாட்சரத்தின் மத்தியில் சிகாராட்சரமிருக்கிறது. அது கோயில் மூலஸ்தான சிகரம் போற் சிரேஷ்டமாம். இவ்வாறு எசுர் வேதத்தின் நடுநாயகமாக விளங்குகின்ற பஞ்சாட்சர மந்திரம் மஹா சிரேஷ்டமாகும்.

ததே. சிவஞான போதத்தினுடைய உயர்ந்த உண்மையான உள் கருத்து ஸகல வேதாகம சாஸ்த்திர ஸாரமான வேதாந்தக் கருத்தையும் அதேபோல் சைவ ஸித்தாந்தக் கருத்தையும் அனுசரித்து ஒத்து இருக்கிறது. அதாவது, அத்வைத சைவசித்தாந்த ஸாரமாயிருக்கிறது.

பின்னே வந்த பெரியோர்கள் இந்நூலினுடைய மேற்கண்ட கருத்து அறிந்தும் சகல க்ஷேத்திர சிரோரத்னமாக உள்ள சிதம்பர க்ஷேத்திரத்தில் சித்ஸபையில் ரூபாரூபமாக மூலஸ்தான நடராஜ மூர்த்தி விளங்குவதைப் பிரத்யக்ஷமாய்ப் பார்த்திருந்தும் துவைதம் வேறு; அத்வைதம் வேறு; என்று உரைநூல் எழுதியிருக்கின்றனர். அந்த அந்த வகைகளில் அவைகள் சிறந்தவைகளேயானாலும் ஸமரஸ ஆஸ்திக பக்திமான்களுக்கு இக்காலத்திற்கு இந்த உரைநூலே மிகவும் பிரயோஜனகரமாய் இருக்குமென்பது எனது அபிப்பிராயம். இதைப் படிக்கும் பண்டிதர்களும் இதை ஒத்துக்கொள்வார்கள் என நம்புகிறேன். சிதம்பரம் ஸ்ரீமந் நடராஜமூர்த்தி கும்பாபிஷேகம் நடைபெறும் இச்சமயத்தில் இந்நூல் வெளிவருவது மிகவும் பொருத்தமாகவும், எல்லோராலும் புகழ்ந்து பாராட்டத் தக்கதாகவும் இருக்கிறது.

இதை எல்லோரும் வாங்கிப் படித்து மகிழ்ந்து பாராயணஞ் செய்கிறவர்களுக்கு மேன்மேலும் சிவ பக்தியும், இஹத்தில் இஷ்டகாம்யார்த்த ஸித்தியும் இறுதியில் முத்தியும் ஸ்ரீமத் சிவானந்த நடராஜ மூர்த்தி அருளால் உண்டாகும்.

மன்மத ௵ ஆனி ௴ 16 ௳ (30—6—55)

சுபம்.

ஸ்ரீமந்நடராஜமூர்த்தி துணை.
ஓம் சித்சபேசாய மங்களம்.

சிதம்பரம்.

## ஸரஸகவிராஜ; கவிமார்த்தாண்ட;
## N. S. சிதம்பரேஸ்வர தீக்ஷிதர் அன்போடு
## எழுதியளித்த
## சிறப்புரை.

"யஸ்மாத்ஸர்வம் ஸமுத்பன்னம் சராசரமிதஞ்ஜக்து.
இதன் நமோ நடேசாய தஸ்மைகாருண்ய மூர்த்தயே"

ஸ்ரீமத் சிவபெருமான் திருவாக்கிலிருந்து வெளி வந்த ஆதிமொழியானதும், சகலமொழிக்கும் தாய் மொழியானதும் மிகத் தூய்மையானதால் ஸம்ஸ்கிருதம் எனப் பெயர் பெற்றதுமான வடமொழியிலும். நம் தாய்மொழியான செந்தமிழிலும், மிகவும் வல்லவரும்; வேதாந்த சாஸ்த்திரத்திலும், சைவ சித்தாந்த சாஸ்த்திரத்திலும், பெரும் பாண்டித்தியமும், சிஷ்யர்களுக்கு தெளிவாய்ப் போதிக்கும் திறமை வாய்ந்தவரும்; ஸ்ரீமந்நடராஜரிடத்திலும், தில்லைவாழந்தணர்களாம் தீக்ஷிதர்களிடத்திலும் ஸத் பக்தி விசுவாசமுடையவருமான சிதம்பரம் ஸத் குரு விலாஸ மடம் ஸ்ரீ சிதம்பர ஸ்வாமிகள் அவர்கள் எழுதியுள்ள "சிவஞான போதம் சூத்திரமும் உரையும்" என்ற சிறந்த நூலைப்பார்த்து மகிழ்ந்தேன்.

சிவஞானபோதம் ஆதியில் சிவபெருமானாலேயே சிவபக்தாக்ரண்யராகிய நந்தியெம்பெருமானுக்கு வடமொழியில் உபதேசித்ததும் பிறகு ஸ்ரீ மெய்கண்டதேவர் தமிழில் பன்னிரண்டு சூத்திரங்களாக திருவாய் மலர்ந்தருளினார் என்பதும் வித்வான்கள் அறிந்

ஸ்ரீ திருஞானசம்பந்தர்—தேவாரம்.

காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினும் மெய்ப்பொரு ளாவது
நாதன் நாமம் நமச்சி வாயவே.

நமச்சிவாயவென்னும் அம் மந்திரமானது வேதம் நான்கின் தாற்பரியமாய் மெய்ப்பொருளாக விளங்குகின்ற சிவனது மஹா மந்திரமாக வுள்ளதாம்.

ஆனதால், பஞ்சாட்சர மஹாமந்திரத்தை அன்பு பெருகி மனங்கசிந்து நிரந்தரம் அனன்ய சிந்தனை செய்கிறவர்களுக்கு அது சிவன் திருவடி அடைதல் என்னும் முத்தியை அளிப்பது திண்ணம்.

அத்தன்மைய பஞ்சாட்சர மஹாமந்திரப் பொருளாகிய சிவமே முதற்கடவுள் எல்லாமா யல்லதுமா யிருப்பவர். அவரை அறிந்தடையுங் கருத்தாகவே வேதாகம புராணேதிகாசாதி சாஸ்திரங்களும், தேவாரம், திருவாசகம், திருமந்திரம் முதலான திருமுறைகளும் கூறுகின்றன.

அவைகளில் சிவபரம்பொருளை அறிவதற்கு வேதப்பிரமாணமே முக்கியமாகும். மற்றவை வேதப்பிரமாணத்தை அனுசரித்தே பிரமாணங்களாகும்.

ஸ்ரீகைலாயபதியாகிய பரமசிவம் நிவர்த்தி மார்க்கமாய் ஸ்ரீ தட்சிணாமூர்த்திமுகமாய் எழுந்தருளியிருந்து நான்கு வேதத்தின் தாற்பர்யப் பொருளாய் எல்லாமாயல்லதுமா யிருக்குந் தன்னை மௌன சுபாவத்தால் உணரும்படி சனகாதி சிஷ்யர்களுக்கு உபதேசித்தனர்.

"கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா
றங்கமுதற் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப் பாலாய்
யெல்லாமா யல்லதுமாய் இருந்ததனை
இருந்தபடி இருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாமல்
நினைந்துபவத் தொடக்கை வெல்வாம்."

அம்முறையே குரு சிஷ்ய பரம்பரையாக வைதீக சைவ சமயாசார பூர்வகமாக சதாசாரர்களாய் நிவர்த்தி மார்க்கத்தை அனுசரித்து ஞானசாரிய ருபதேசத்தினால் சிரவணாதி அனுசந்தானமுள்ளவரான மனன சீலர்கள் மஹாவாக்கியப் பொருளாகிய சிவபரம் பொருளை யுணர்ந்து அனர்த்தம் நீங்கி ஆனந்தமனுபவித்துத் திருவடியடைகின்றனர்.

அவ்வாறின்றி சைவசமயாசார கர்மங்களை இட்சா பூர்வகமா யனுஷ்டிக்கின்றவர்களாகப் பிரவிருத்தி மார்க்கத்திலுள்ளவர்கள், கிரமமாகத் தாசமார்க்க முதலானவற்றைப் பற்றினவராய் ஞானசாரியருபதேசத்தினால் சிரவணாதி அப்பியாசமுள்ளவரான மனன சீலர்கள், பஞ்சாட்சரப் பொருளாகிய சிவபரம் பொருளை உணர்ந்து அனர்த்தம் நீங்கி ஆனந்த மனுபவித்துத் திருவடி அடைவர்களென்னும் பெருங் கருணையினால், ஸ்ரீ பரமசிவம் சைவாகமம் இருபத்தெட்டையும் அருளிச்செய்தனர்.

அச் சைவாகமங்களின் சாரமாய்ப் பஞ்சாட்சரப் பொருளை விளக்கஞ் செய்வதான சூத்திராத்மகமாய்ப்

பன்னிரண்டு சுலோக வடிவ †சிவஞான போதத்தை அருளிச்செய்தனர்.

எல்லாமா யல்லதுமாய் சச்சிதானந்தமா யிலகும் சிவ சொரூபத்தை உணர்த்துவதென்னும் பொருள் தருதலால் சிவஞானபோதம் என்னும் பெயரை சுலோகத்திலேயே இறைவன் அமைத்தனர்.

அசிந்திய சக்தனான இறைவன் எல்லாமாய் இருந்தும் அவற்றில் கலவா(சம்பந்தமில்லா)திருத்தல், அல்லதுமா யிருப்பதாம். இவ்வாறான எல்லாம் வல்ல இறைவன் சொரூபத்தில் வேற்றுமைப் பிரேரணைகளை உண்டுபண்ணுவது இறைவனது பிரிவின்றிய சத்தியினியல்பாம்.

எல்லாமா யல்லதுமாயுள்ள இறைவனது நிர்க்குண சொரூபத்தை அனுபவத்திலுணர்ந்த ஞானிகள், காரியவடிவ உலகம் உபாதான நிமித்த காரணம் எல்லாவற்றையு மொருமிக்க எல்லாமா யிருப்பதென்றும், அவ்வெல்லாவற்றிலும் சம்பந்தமில்லாது அசங்கமாய் இருத்தலே அல்லதுமாயிருப்பதென்றுங் கூறுவர்.

நாலு காலின்றி ஒரு வீடமையாததுபோல நான்கு பாதமின்றி மோட்ச வீடமையாது, ஆனதால் வேதாகம புராணேதிகாச முதலான சாஸ்திரங்களும், தேவாரம், திருவாசகம், திருமந்திரம் முதலான திருமுறைகளும், சரியை, கிரியை, யோகம், ஞானம்

---

†சிவ = எல்லாமாய் அல்லதுமாய்

ஞான = சத்துச் சித்து ஆனந்தமாய் (இருப்பதை)

போதம் = உணர்த்துவது.

என்னும் நான்கு பாதங்களை வடமொழியிலும், தென்மொழியிலும வர்ணிக்கின்றன.

சரியை முதலிய நான்கு பாதங்களைக் கூறுகின்ற ஞான நூல்கள் மாணுக்கன் பக்குவத்திற்குத் தக்கதாகத் தள்ளத்தக்கதை பூர்வமென்றும், கொள்ளத் தக்கதைச் சித்தாந்தமென்றுங் கூறுகின்றன.

அவைகளில் வேதாகமங்களின் சாரமாய் முடிவான தாற்பரியமாயுள்ள நிச்சய வடிவ சித்தாந்தத்தைப் போதிப்பதே சிவஞானபோதம்.

அது தேவவாணியில் இறைவன் திருவாய் மலர்ந்து சொரிந்த அமிர்தம். அவ்வமிர்தத்தை நாமெல்லோரும் அனுபவித்து முத்தியின்பமடையுமாறு கருணைக்கடலான ஸ்ரீமெய்கண்டதேவ நாயனர் தமிழ்மொழியில் பன்னிரண்டு சூத்திர வடிவமாக அருளிச்செய்தனர்.

இத்தமிழ் சிவஞானபோதம் தள்ளுவனவற்றைக் கூருது கொள்ளுவனவற்றை மட்டும் விளக்கும் காரணத்தினுல் அதற்குச் சித்தாந்த சாஸ்திரமென்னுஞ் சிறப்புடைப் பெயர் உலகின்கண் மிகவும் பிரசித்தமாக விளங்குகின்றது.

மேலும் துவைத புத்தியுள்ளார்க்குத் துவைத அர்த்தமுடையதாகவும்; விசிஷ்டாத்வைத புத்தியுள்ளார்க்கு விசிஷ்டாத்வைத அர்த்தமுடையதாகவும்; அத்வைத புத்தியுள்ளார்க்கு அத்வைத அர்த்தமுடையதாகவும்; சுவானுபூதிமான்களுக்கு சிவானந்த ஏகரசமாகவும் விளங்குவதாதலின், இதன்கண்ணமைந்துள்ள சூத்திரங்கள் அருட்சத்தி யமைந்துள்ளனவென்பது கொள்ளக் கிடந்தது.

வியாச சூத்திரந் திரிமத வியாக்யானக் கருத்துள்ளதுபோல இச்சூத்திரமுந் திரிமத வியாக்யானக் கருத்துள்ளது என்பது உணர்தற்பாலதாம்.

அன்றியும் ஒருவனுக்கு மகப்பருவம் இளமைப் பருவம், முதுமைப்பருவம் மூன்றும் இயல்பாயுள்ளது போல இச் சூத்திரங்களும் துவைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம் ஆகிய இம்மூன்று மதக் கொள்கையுமுள்ளனவாம்.

சரியை, கிரியை இரண்டும் துவைதம், யோகம் விசிஷ்டாத்வைதம். ஞானம் அத்வைதம். இவற்றை வேதாந்தநூலில் ஈசா! சரீர திருஷ்டியால் உமக்குத் தாசன், சீவ திருஷ்டியால் உமது அம்சம், சொரூப திருஷ்டியால் நீயே நான் என்று கூறப்பட்டுள்ளன.

ஆகலின், வேதாந்த சூத்திரத்திற்கு அர்த்தங் கொள்வதுபோல சித்தாந்த சூத்திரத்திற்கும் அர்த்தங் கொள்ளுதல் மேலானதாம் என்று ஞான விஞ்ஞானமுள்ளோர் கொள்வர்.

---

## உரைச் சிறப்பு.

வேதாந்த சாஸ்திரங்கள் யாவும் மஹா வாக்கியப் பொருளை விளக்கம் செய்வனவாம்.

சைவாகம சித்தாந்த சாஸ்திரங்கள் யாவும் பஞ்சாட்சரப் பொருளை விளக்கம் செய்வனவாம்.

சிவபரம்பொருளொன்றையே மஹா வாக்கியத்தின் பொருளென்றும், பஞ்சாட்சரத்தின் பொருளென்றுங் கூறுவர்.

சகல சாஸ்திரங்களினுலும் தாற்பரியமாய்க் கூறப் படுகின்றதுசிவ பரம்பொருளொன்றே. அதுவே சைவ சமயாசாரியர் நால்வர்களால் தேவாரம், திருவாசகங் களில் வியந்தோதப்பட்ட பஞ்சாட்சரப் பொருளாம்.

பஞ்சாட்சர மஹாமந்திரத்தால் சுலபமாய்ச் சிவ மாகிய பதியை யுணர்ந்து திருவடியடையுமாறு சிவ ஞானபோதம் செவ்வனே விளங்கக் கூறுகின்றது. ஆனதால் சிவஞானபோதம் பஞ்சாட்சரத்தின் அர்த்த வியாக்கியானமடங்கிய சூத்திரங்களென்பது கருத்து.

## அவற்றின் விளக்கம்.

பஞ்சாட்சரத்தில் சி=சிவம், வ=அருட்சத்தி, ய=சீவன், ந=மலம், ம=திரோதாயி. எனப் பொருள் கொள்கின்ற முறையே சிவஞானபோதத்தில் முதற் சூத்திரம் சிகாரப்பொருளதெனவும், இரண்டாம் சூத்திரம் வகாரப்பொருளதெனவும், மூன்றுஞ் சூத்திரம் யகாரப் பொருளதெனவும், நான்காஞ் சூத்திரம் நகாரப்பொருளதெனவும், ஐந்தாம் சூத்திரம் மகாரப்பொருளதெனவும் கொள்க.

அவற்றில் சிவமும் அருட்சத்தியும் பிரிவின்றி ஒன் ருனதால் சிகார வகார இருவட்சரப் பொருளும் பதி என்று உணர்த்துகின்ற முதல் இரண்டு சூத்திரம் ஏகதேச லெட்சணைத்தால் பதி இயல்பை விளக்கஞ் செய்கின்றனவாம்.

யகார வட்சரப்பொருளான ஆன்மா சரீர மூன் றிற்கும் வேருகவுளதென உணர்த்துகின்ற மூன்றுஞ் சூத்திரம் பசு வியல்மை விளக்கஞ் செய்கின்றதாம்.

நகார மகாரமென்னு மிருவட்சரப் பொருளாகிய மலம், திரோதாயி எனும் பாசங்களுளவென உணர்த்துகின்ற நாலு ஐந்தாகிய இரண்டு சூத்திரங்கள் பாசவியல்பை விளக்கஞ் செய்கின்றனவாம்.

சிவ, என்னும் பதப்பொருளாகிய பதி, சத்து சித்து ஆனந்த சொரூபமென்றும், நமவென்னும் பதப்பொருளாகிய பாசம் அசத்து சடம் துக்க வடிவமென்றும், ஆருஞ்சூத்திரம் விளக்கஞ் செய்கின்றதாம்.

'சிவ' என்னும் பதப்பொருளான அருட்சோதி சிவமாகிய பதியே மெய்ப்பொருளென்றும், நமவென்னும் பதப்பொருளான பாசம் பொய்ப்பொருளென்றும், பொய்ப் பொருளான பாசத்திற்குப் பதியைத்தவிர சொரூபமில்லாமையினுல் சூனியமென்றும். பதியாகிய சிவம் அத்வைதமென்றும், யகாரப்பொருளான ஆன்மா அத்வைதம் அனுபவிப்பனென்றும், ஆன்மா சிற்சட வடிவமென்றும் ஏழாஞ் சூத்திரம் விளக்கஞ் செய்கின்றதாம்.

இறைவன் குருவாக வந்து இருவினை ஒப்பு மலபரிபாகம் சத்தினிபாதம் முதலிய தபசு நிறைந்த சிஷ்யனுக்கு பதியின் ஞானமுளதாகும்பொருட்டு 'நம' என்னும் இருவட்சரப் பொருளான பாசங்களாகிய தனுகரணுதிகளில் ஆன்மபுத்தியை நீக்கும் உபாயத்தைத் திருட்டாந்த பூர்வகமாய் அறிவித்து 'சிவாய' எனும் மூன்றட்சரப் பொருளான சிவோகம் பாவனையாக ஸ்திதி பெறும்படி அன்னியவிருத்தி யில்லாதவனுய் அனுசந்தானஞ் செய்யும் உபாயத்தை உபதேசிக்கின்ற முறையை எட்டாஞ் சூத்திரம் விளக்கஞ் செய்கின்றதாம்.

ஞானுசாரியருபதேசித்த பதிஞானந் திடமாமாறு நமவென்னும் இருவட்சரப் பொருளான பாசங்களைக் கானல் சலம்போல மித்தையென் றறிந்தவற்றை மறந்து சிவாயவெனும் மூன்றட்சரப் பொருளான சிவோகம் பாவனையாக இடையருது பஞ்சாட்சர சிந்தனையுள்ளவனுய்ச் சமாதி யப்பியாசஞ் செய்யு முபாயம் ஒன்பதாஞ் சூத்திரம் விளக்கஞ் செய் கின்றதாம்.

அவனே தான் எனும் அபேத ஞானத்தால் அதிஷ்டானபதியின் சொரூபம் சாட்சாத்காரமாகத் தன்னனுபவத்தில் விளங்கவும், ஆரோபமான பாசங் கள் காணப்படாமையினுலும், அதிஷ்டான சிவமே விளங்கலாலும், சிவமே அத்வைதமென்னும் அனுபவ முள்ள சீவன்முத்தன் இயல்பை பத்தாஞ் சூத்திரம் விளக்கஞ் செய்கின்றதாம்.

சீவன்முத்தன் அருவமனது அன்பே வுருவான பராபக்தியாய் சிவசொருபத்தில் பாலில் சலம்போல் நிலைத்து சிவானந்த மனுபவித்துப் பின்னர் வினை முடிவில் அன்பே சிவமாய்க் கரைந்து பாலில் பால் போல் அபேதமாய் முத்தி(திருவடி)யடைவனென் னுஞ் சீவன்முத்தன் பராபக்தியின் இயல்பை பதினுே ராஞ் சூத்திரம் விளக்கஞ் செய்கின்றதாம்.

சிவஞானம் பெற்று முத்தியின்பமடையும் பொருட்டு இந்நூலை உபதேசங் கேட்கும் மாணுக்கன் கடவுள் வழிபாடு முதலிய சாதனங்களை அனுஷ்டித் துத் தபசு பூரணமாகி ஞானுதிகாரியாக வேணு மென்பதை பன்னிரண்டாஞ் சூத்திரம் விளக்கஞ் செய்கின்றதாம்.

சிவஞானபோதம் பன்னிரண்டு சூத்திரங்கட்கும் சுருக்கமாக அர்த்தம் வேண்டுமென்று விரும்பிக் கேட்ட அன்பர் நிமித்தஞ் சிந்தித்து ஸ்ரீ முருக னருளால் இவ்வுரை எழுதப்பட்டது.

சகல சாஸ்திரங்களின் சாரமாயுள்ள சித்தாந் தத்தையே சிவஞானபோதம் தீவிரதர சத்திநிபாதம் வந்த உத்தமோத்தமர்கட்கு உபதேசிக்கின்ற ஞான சாஸ்திரமானதால் இதில் மதம், சமயம் இவைகளைப் பற்றி விரித்தலினால் பயனின்று, மாருக மனம் சலித் தற் கேதுவாமென விடுத்து, அமைதியாய்ச் சாந்த மடைவதற்கு அனுகூலமாக இவ்வுரை எழுதப்பட்ட தென்க.

சூத்திரங்கள் அனுபவார்த்தமும், இலக்கண வமைப்பும் அமைந்துள்ளன. அனுபவார்த்தத்தை விளக்கம்செய்யு முறையில் இவ்வுரை சுருக்கமாக எழுதப்பட்டது.

ஸ்ரீ விநாயகர் முதலிய ஓர் மூர்த்திக்குத் தக்க ஆடை, அணி, மாலையிட்டு அலங்கரித்தல்போல இந் நூற்கு பஞ்சாட்சர மஹாமந்திரார்த்தமான இவ் வுரை தக்கதென வெளியிடப்பட்டதாகும்.

அன்பர் உள்ளம் கவர் கள்ளங் காட்டுவதும், சன்மார்க்கத்தின் பயனை யளிப்பதுமான இச் சிவஞான போதத்தைச் சுத்த சைவ சமயாசார சீலர்கள் இதிற் பன்னிரண்டாம் சூத்திரத்தில் கூறிய பிரகாரம் அனுஷ்டித்துத் தபசு பூரணமானவர்களாய்ச் சுவாநு பூதிமான்களான ஞானசாரியரைச் சரணமடைந்து உபதேசிக்கப்பெற்று அர்த்தங்களை ஆராய்ந்து

தெளிந்து சிவஞானிகளாய்ச் சிவானந்தமனுபவித்து சிவசொரூபத்தை (திருவடியை) அடைவார்கள்.

மேலும் இந்நூலை உபதேசங் கேட்கும் அதிகாரி உணரும் பொருட்டு பஞ்சாட்சரப்பொருளை நிர்க்குண மாகவும் சகுணமாகவுங் கூறுகின்ற ஆன்றோர் வாக்குகள் சில வருமாறு:

### உண்மை விளக்கம்.

அஞ்செழுத்தே ஆகமமும் அண்ணல் அருமறையும்
அஞ்செழுத்தே ஆதிபுரா ணமனைத்தும்—அஞ்செழுத்தே
ஆனந்தத் தாண்டவமும் ஆறுறுக் கப்பாலாம்
மோனந்த மாமுத்தி யும்.

தோற்றந் துடியதனில் தோயுந் திதியமைப்பில்
சாற்றியிடு மங்கியிலே சங்காரம்—ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தே யுற்ற திரோதமுத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு.

சேர்க்குந் துடிசிகரஞ் சிக்கனவா வீசுகரம்
ஆர்க்கும் யகரம் அபயகரம்—பார்க்கிலிறைக்
கங்கி நகரம் அடிக்கீழ் முயலகனார்
தங்கு மகரமது தான்.

### பஞ்சாட்சர விளக்கம்.

ஒலிசெயுந் தமரு கக்கை யுயர்வுறு சிகார மிக்க
அலைதரு கால்காட் டுங்கை யாகும்வா வபய மாகும்
மெலிவிலாக் கைய காரம் வெந்தழற் காந காரம்
வலமிகு முயல கன்மேல் வைத்தசே வடிம காரம்.

இன்புரு யகார வான்மா வியல்திரோ தையாம காரம்
வன்கணு வரணந் தன்னை மருவியம் மாயை யான
புன்கண மலந காரம் பொருந்தியே துன்ப மெய்தும்
நன்குறு புண்ணி யத்தா னுடுவ னருளாம் சித்தை.

துங்கவவ் வகார சித்தாற் றுயர்தரு திரோதை நீங்கி
பங்கமார் மலமு மாயப் பகர்சிவ சிகார மாகும்
எங்குமார் சத்து ரூப வியல்பினைப் பெறுவா னென்றல்
புங்கவிம் மந்தி ரத்தின் பொருளதா நன்று காணே.

*(மலபரிபாகத்துக்குத் தக்கவாறு*
*பஞ்சாட்சர சிந்தனை செய்யும் பகுப்பு)*

பஞ்சமா வக்க ரத்தின் பகுப்பினை யுரைப்பக் கேண்மின்
நஞ்சுறு யகார சீவ னகார மகார மாய
அஞ்சன மலந்தி ரோதை யாகுதற் போதத் தோனுய்
அஞ்சுக மொழியா ளம்மை யாமருள் வகார முன்னு.

அப்பனுஞ் சிவம தாய வச்சிகா ரத்தை நாடல்
செப்புதூ லவைந்தெ ழுத்தாஞ் சிறந்தவச் சீவன் றுனே
தப்புறு தற்போ தத்தைத் தாழ்த்தியே பின்ன தாக்கி
ஒப்பிலா வருண்முன் னுக வுயர்சிவ சிகார நோக்கல்.

சூக்கும மாகு மந்தத் துயர்தரு தற்போ தந்தான்
தாக்கிடா தொழிந்து நின்றத் தண்ணருள் வகாரத் தானே
வாக்கினுக் கெட்டாச் சுத்த வத்துவாஞ் சிவத்தைத் தானே
நோக்கிடல் கார ணங்காண் நொய்யதற் போத நீங்கி.

அருளெனும் வகார மாய வகண்டித வடிவாய் நின்று
மருவிலச் சிவத்தை நோக்கல் வன்மகா கார ணங்காண்
அருவுரு வகார மாய வருளையும் விட்டுத் தானும்
ஒருவலில் சிவமாய் நிற்ற லோதிய வற்றின் மேலாம்.

இத்தகைச் சிகாரந் தானே யெழிற்சிவ மாகி நிற்கும்
முத்தியை யீயு மந்த முதன்மையைப் பெற்ற தாலே
முத்திபஞ் சாக்க ரப்பேர் முந்துறப் பெற்ற தாகும்
இத்திற மைந்தெ ழுத்தே யீயுமான் முறையே முத்தி.

நலமிலிந் நாம ரூப நகாரமே மகார மாகும்
சொலலிலாச் சிவாய சச்சிற் சுகவடி வென்ன லாகும்
சொலுநம முன்னுப் பின்னர்ச் சூழ்ந்திடல் சச்சித் தின்பம்
பலனுறு தூல மென்று பகர்ந்திடப் படுமே லந்த.

சச்சிதா னந்த முன்னுத் தன்னையே நோக்கிப் பின்னர்
இச்சக நாம ரூப மெழுந்திடா தொறுத்த ருனே
மெச்சுசூக் குமமா மங்கு மேவுகண் டபாவம் விட்டு
மிச்சமி லகண்ட சித்தாய் மேவுதல் கார ணங்காண்.

அவ்வகண் டஞான மாகு மதனையும் விட்டுக் குன்ரு
வெவ்வமில் சிற்சத் தாக விலகன்மா கார ணம்மேல்
அவ்வொளி யாய சித்து மடங்கியே சத்தாய் நிற்றல்
இவ்வெலா வற்றின் மேலா வியம்பிடு மதீத மாகும்.

## வேறு

நகார மாகிய சேரியை நஞ்செ்ன விடுத்து
மகார மாகிய மயலெலாம் வேருெடுங் களைந்து
வகார மாகிய வனத்தினி லிருந்திளைப் பாறி
சிகார மாகிய நகரியை யடைந்தனன் சீவன்.

## திருமந்திரம் 404

ஒருவனு மேஉல கேழும் படைத்தான்
ஒருவனு மேஉல கேழும் அளித்தான்
ஒருவனு மேஉல கேழும் துடைத்தான்
ஒருவனு மேஉல கோடு உயிர்தானே.

## 2711

சிவனரு ளாய சிவன்திரு நாமஞ்
சிவனரு ளான்மாத் திரோத மலமாயை
சிவன்முத லாகச் சிறந்து நிரோதம்
பவம தகன்று பரசிவ ணுமே.

## 2798

மருவுந் துடியுடன் மன்னிய வீச்சு
மருவிய அப்பும் அனலுடன் கையுங்
கருவின் மிதித்த கமலப் பதமும்
உருவில் சிவாய நமவென வோதே.

2799

அரன் துடிதோற்றம் அமைத்தல் திதியாம்
அரன் அங்கிதன்னில் அறையிற் சங்காரம்
அரனுற் றணைப்பில் அமருந் திரோதாயி
அரனடி யென்றும் அனுக்கிரகம் என்னே.

அனாதி மலமுத்த சித்துருவாய் அருவமா யுருவமாய் ஐந்தெழுத்தின் பொருளாய் ஐந்தொழிற்குங் கர்த்தாவாய் ஆனந்த நடனஞ் செய்தருளும் ஸ்ரீ நடராஜமூர்த்தியே முழுமுதற் கடவுளாகிய சிவம். அச்சிவமே ஒருவனுயும், வேறுயும், அனேகனுயும், உயிர்களுக்கு உணர்த்துகின்ற அந்தர்யாமியாயுள்ள (இறைவன்) எனக் கொள்க.

இவ்வாறுகக் கூறுகின்ற பஞ்சாட்சரப் பொருளாகிய சிவத்தை நிர்க்குணமாகவும், சகுணமாகவும். உயிர்க்குணர்த்துவதாகவும் சிவஞானபோதம் கூறுகின்றது.

ஐந்தெழுத்தின் பொருள் பதியென்று ஒரே வஸ்துவாக அனுபவத்தி லுணர்வது ஒன்ருய் எனவும், பதி பசு பாசம் என்று வேருக அறிவது வேருய் எனவும், உயிருடனிருந்து உணர்த்துவதாக அறிவது உடனுய் எனவுங் கூறுவதென உணர்க.

ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் 'ஏகன் அநேகன் இறைவ னடிவாழ்க' என்று கூறியுள்ளார்.

ஏகன் = நிர்க்குணம். அநேகம் = சகுணம். இறைவன் = உயிருடன் இருந்து உணர்த்துபவன்.

ஸ்ரீ அப்பர் சுவாமிகள் 'எல்லாம் சிவமென்ன நின்ருய் போற்றி' என்று கூறியுள்ளார்.

இவை முதலியனவாக அளவிறந்த வாக்கியங்களால் தேவாரம் திருவாசகம் இறைவனை ஒன்ருய், வேருய், உடனுய், அதாவது நிர்க்குணமாய், சகுணமாய் மறைந்திருந்து உணர்த்துவதாய், அந்தர்யாமியாய் வர்ணிக்கின்றன.

சிவனது நவந்தரு பேதமும். அஷ்ட மூர்த்தமும் சகுணம் என்பர். சகுணத்தில் வேறுபோல் தோற்றினும் எல்லாமாய் அல்லதுமாயுள்ள நிர்க்குணத்தில் ஒன்றே. அதாவது தேசகால வஸ்து பரிச்சின்னமின்றிய பரிபூரண சிவமே ஆகலின், நிர்க்குண சிவமே 8-ம் சூத்திரத்திற் கூறிய 'அது நீ' என்னும் ஐக்கிய ஞான உபதேச வாக்கிற்கும், 10-ம் சூத்திரத்திற் கூறிய 'அவனே தான்' என்னும் ஐக்கிய ஞான வனுபவத்திற்கும் பொருள் என்றும், முடிவான சித்தாந்தத்தைச் சிவஞானபோதம் கூறுகின்றதென்பது சிவஞானிகளுக்கு விளக்கமாம்.

பஞ்சாக்ஷர சிந்தனையினுலே இறைவன் அருளைச் சுலபமாய்ப் பெற்று திருவடி அடையலாமென்பது திருமுறைகளின் சாரமான கருத்தாகும்.

ஆகலின், அவைகளின் சார பூதமான சிவஞான போதத்திற்கும் பஞ்சாட்சரப் பொருளை விளக்கம் செய்வதாக இவ்வுரை எழுதப்பட்டதாகும்.

இவ்வுரைக்கு உதாரணமாக திருமுறைகளிற் பத்தாம் திருமுறையாக வுள்ளதும், சாத்திரமாகவும், தோத்திரமாகவும், மந்திரமாகவும் சிறந்து விளங்குவதான திருமந்திரத்தில் சிவம், சீவன் எனவும், சீவன் சிவமெனவும், ஐக்கியம் (ஒன்று) என்பது முதலிய வாக்கியங்களில் ஐயம் நீங்கும்படியாக அறிவிக்கின்ற

சில சில பாடல்கள் அந்தந்த சூத்திரங்கட்குங் காட்டப்பட்டிருக்கின்றன. தேவாரம் திருவாசகங் களில் சில திருவாக்குகளும், மற்றும் ஆன்றோர் வாக்குகளில் சில வாக்குகளும் ஏகதேசமாகக் காட்டப்பட்டிருக்கின்றன.

திருமந்திரம் 1438

வேடங் கடந்து விகிர்தன்றன் பாண்மேவி
ஆடம் பரமின்றி ஆசாபா சம்செற்றுப்
பாடொன்று பாசம் பசுத்துவம் பாழ்படச்
சாடுஞ் சிவபோ தகர்சுத்த சைவரே.

சுத்த சைவத்துறையி லுள்ளவர்கட்கு இவ்வுரை செவ்வனே விளங்கும். திருமந்திரத்தை ஊன்றி ஆராய்ந்துணர்ந்தால் ஐக்கிய ஞானத்தில் ஐயம் நிகழா தென்பது திண்ணம்.

ஐய மாகட லாழ்ந்த வுயிர்க்கெலாங்
கையி லாமல கமெனக் காட்டுவான்
மைய நீர்திரு மந்திரஞ் செப்பிய
செய்ய பொற்றிரு மூலனைச் சிந்திப்பாம்.

இதில் வந்துள்ள கடவுள், பரமசிவம், ஈஸ்வரன், சிவன், இறைவன், பேரறிவு, பதி, முதல்வன், தலைவன் என்னும் நாமங்கட்குப் பொருளொன்றே யாகும்.

ஆன்மா, சீவன்' சிற்றறிவு. பசு, உயிர் என்னும் சொற்களுக்குப் பொருள் ஒன்றேயாகும்.

இவ்வுரையில் குற்றமுளதாயின் உலகம் பொறுக்க.

என்செய லொன்று மில்லை யெந்தைசற் குருவே யீசா
உன்செய லாலே என்னை யுருப்படச் செய்தாள் வாயே
பின்செய லறியாப் பேதை பிழைதனைப் பொறுத்து நீயே
கன்மனங் கனியச் செய்வாய் கந்தனே கருணைத் தேவே.

திருச்சிற்றம்பலம்,

சிதம்பர சுவாமி,
சற்குரு விலாச மடம், சிதம்பரம்.

சிவமயம்.



சிற்சபையில் நடமாடுஞ் சிதம்பர தேவாவுன்றன்
பொற்பதங் கண்டபேரும் புகுவரோ யோனிதன்னிற்
சிற்சொரூப வம்மையித்தைச் செப்புமா கண்டு நிற்பாள்
நற்சொரூப நான்கண்டுய்ய நல்குவாய் பாதப்போதை.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

*ஓம் சரவணபவாய நம:*



மிகுமகங் கார மென்னும்
வெய்ய சூர் தனைத்தடிந்திங்
ககிலகா மாதி மற்றை
யசுரரைச் சிதையச் செய்து
சகலமுந் தானுக் காணுஞ்
சாம்பிராச் சியம தீயுங்
குகனெனுங் குமரன் பாதங்
கொண்டவர் குறைதீர்ந் தாரே.

சிவமயம்.

ஸ்ரீ முருகன் துணை.

# ஸ்ரீ தண்டாயுதபாணி ஸ்துதி பஞ்சகம்.

---

1, நித்தமெய்ஞ் ஞானச் சுடர்வடி வேலால்
நீளகங் காரமாந் தருவை
கொத்தறக் கடிந்தெங் கொடும்பவ லயமாங்
கொடியசூ ரினைப்பிளந் துனது
புத்தமு தனைய ஞானபோ னகமாம்
பூரணா னந்தமே யளித்தென்
சித்தமே சிவமா யிரண்டற நிற்குஞ்
சீரருள் சண்முக மணியே!

2. அமலனே வள்ளிதெய் வானையின் கணவா
வனாதிவஞ் ஞானமாம் பகையை
அமலமா மகண்ட விருத்தியா மயின்மீ
தமர்ந்துநீ வீட்சண வேலால்
நிமலனே நீறா யழித்து நீயுனது
நித்தியா னந்தமாம் வாழ்வை
எமதுளங் கரைய வளித்தெனை யாள்வா
யீசனே சண்முக மணியே!

3. வேதனே விமலா விண்ணவர் தலைவா
வேதத்தின் முடிதனில் விளங்கும்
போதனே புனிதா புகழுமால் மருகா
பூரண வின்பமாம் பொருளே
ஏதமாம் பிறப்பிறப் பாதியாந் துன்ப
மென்றுமே தொடருறா தகற்றி
ஏதமற் றொளிரு மீறிலா வின்ப
மெனக்கருள் சண்முக மணியே!

4. காண்டிப தீர்த்தக் கரைதனி லமர்ந்த
கந்தனே கருணைமா கடலே
ஆண்டவா பழனி பாண்டவா வென்பார்க்
கருடருங் கற்பக மணியே
வேண்டுவ வெல்லாம் விரைவினில் நல்கும்
வேலவா விமலனார் தமக்கு
ஆண்டுவே ரகம்வீற் றிருந்தனை யெனையிங்
காண்டருள் சண்முக மணியே!

5. ஞாலமே லுடையார் பாளைய நகரில்
ஞானமே வழங்கவீற் றிருக்கும்
மூலமே முதல்வா முக்கணன் புதல்வா
முத்தர்க ளுள்ளந்தனி லிலங்குஞ்
சீலனே செல்வா செந்தில்வாழ் முருகா
சிந்தையி லெனக்குநீ விளங்கி
காலனா ரிடத்திற் காட்டிடா தென்னைக்
காத்தருள் சண்முக மணியே!

---

## சுயம்பிரகாச சுவாமிகள் துதி.

பாச மனைத்தையும் தனித்தனி பரிந்திட நீக்கி
நேச மாகிய வறிவுரு நீயெனக் காட்டி
பேசும் ஏழ்வகைப் பிறப்புனக் கிலையெனப் பேசித்
தூசு நீக்கிய சுயம்பிர காசனைத் தொழுவாம்.

---

## சற்குரு துதி.

முடிவிலா வின்பந் தானே முடிவினைக் காட்ட வேண்டிப்
படியினி லுருவாய் வந்து பல்முறை உபதே சித்துத்
தடையறத் தன்னைத் தானே தந்தருள் கருணா மூர்த்திப்
படிவமா மென்ற ஞசான் பதநிதம் தொழுதல் செய்வாம்.

---

ஸ்ரீ சித்ஸபேசாய மங்களம்.

## சிதம்பரம்.

## சாஸ்திராசார்ய, ராஜா. ஸோமசேகர தீக்ஷிதர் சிறப்புரை.

உயர்ந்த குரு பரம்பரையில் சாஸ்திரங்களை முறைப்படிக் கற்றுணர்ந்தவர்களும், போதிக்கும் முறையில் மிகத் திறமை வாய்ந்தவர்களும், ஸ்ரீ நடராஜப் பெருமானிடமும், தில்லை வாழந்தணர்களான பிராமணர்களிடமும் மேலான பக்தியுள்ளவர்களும், ஸதாசார சற்குணங்கள் நிறைந்தவர்களுமான, சிதம்பரம் சற்குரு விலாச மடம் ஸ்ரீலஸ்ரீ சிதம்பர ஸ்வாமிகள் எழுதிய "சிவஞானபோதம்" சூத்திரமும் உரையும் என்ற நூலைப் பார்த்தும் அவர்களே வாசித்துக் கேட்டும் மிக மகிழ்கிறோம்.

நந்தி பெருமானுக்குச் சிவபெருமானால் வடமொழியில் உபதேசித்தருளப் பெற்றது சிவஞான போதம், இது பன்னிரு ஸூத்ரங்களை உடையது. இதனைத் தமிழ்நாட்டார் உய்தற்பொருட்டு அவதரித்த ஸ்ரீ மெய்கண்டதேவர் தமிழில் மொழிபெயர்த்தனர். அச் சூத்ரங்களுக்கு, கருத்துரை மேற்கோள் ஹேது உதாரணங்களையும் இயற்றியுள்ளார். இச் சிவஞான போதம் ராஜவித்யை, தேவவித்யை, சிவ வித்யை, மந்த்ரராஜன் என்றுசாஸ்திரங்களால் போற்றப்படும் மோக்ஷஸாதனமான பஞ்சாக்ஷர மஹாமந்திரத்தின் பொருளையும் பலத்தையும் நன்கு போதிக்கின்றது. இந்நூலுக்குப் பல உரைகள் இருப்பினும் எளிய தமிழ் நடையில் சுருக்கமாயும் ஸமரஸமாயும் அநேகப்பிரஸித்த உதாரணங்களுடன் பொருள்களை போதிக்கும் இந்நூல்எல்லோர்களுக்கும் மிகத்திருப்திகரமாயும் உபகாரமாயுமிருக்குமென்றே நம்புகிறோம். இந்நூல் ஸ்ரீமதானந்த நடராஜ கிருபையால் நீண்ட காலம் சிறப்புடன் பிரகாசிக்கவேணுமென்று விரும்புகிறோம்.

எல்லாம் ஸ்ரீ நடராஜர் கிருபை.

மன்மத ௵ ஆனிமீ 15௳ (29—6—55)

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



ஸ்ரீ மெய்கண்டதேவர்

பண்டைமறை வண்டரற்ற பசுந்தேன் ஞானம்
பரந்தொழுகச் சிவாநந்தம் பரந்து நாடிக்
கண்டவிரு தயகமல முகைக ளெல்லாங்
கண்டிறப்பக் காசினிமேல் வந்தவருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணை மேவு
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தவழச் சிரத்தே வாழும்
பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம்.

---

உ

சிவமயம்.

சிவ சிவ சிவ சிவ

திருச்சிற்றம்பலம்,

# சிவஞானபோதம்

## சூத்திரமும், உரையும்.



### தெய்வ வணக்கம்.

ஆனைமுக னாறுமுக னம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையுள் நாடு.

### ஸ்ரீ சபாநாயகர் துதி.

உலகெ லாமுணர்ந் தோதற் கறியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.

### திருஞானசம்பந்தர் துதி.

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்க
பூதபரம் பரைபொலிய புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்.

## அவதாரிகை.

"சிவ சிவ சிவ"

*மஹா ஸ்ரேஷ்டமான சிவவென்னும் மந்திரம் பஞ்சாட்சரத்திலுள்ள இரு வட்சரம். அதன் மெய்ம்மையான (காரணப்) பொருளை விளக்கஞ்*

செய்ய ஆரம்பித்து, இச்சூத்திரத்தில் உற்பத்தி நாச முடையதாகக் காணப்படுகின்ற காரியவடிவவுலகிற்கு அறிவு ரூபமான காரணகர்த்தா ஒருவருளர். அவரே சிகாரப்பொருளான சிவமென்று பொதுவியல்பு லட்சணத்தால் அறிவிக்கின்ருர்.

## முதற் சூத்திரம்.

**அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்**
**தோற்றிய திதியே யொடுங்கி மலத்துளதாம்**
**அந்த மாதி யென்மனுர் புலவர்.**

(இதன் பொருள்) அவன் அவள் அதுவெனும்= ஆண் என்றும், பெண் என்றும், ஆண் பெண்ணல்லாத அலி என்றும்.

அவை=அம் மூவகைப் பகுப்பாகக் காணப்படுவதும், சேதனம் அசேதனம் என் றிருபிரிவாகச் சொல்லப்படுகின்றதுமான வுலகம்,

மூவினைமையில் = முத்தொழிற் காரியமாய்த் தோற்றம் இருப்பு அழிவதென அறியப்படுதலின் (காரியத் தன்மை ஏதுவால்) காரணமாகிய சேதனக் கர்த்தா ஒருவருண்டென்று துணியப்பெறும். அக் கர்த்தாவினுல்.

தோற்றிய திதியே ஒடுங்கி=உண்டாகி இருந்து ஒடுங்கியும்.

மலத்துளதாம்=ஆணவாதி மலம் நீக்கமின்றி லயப்பட்டிருத்தலின் (மீண்டும் காரணத்திலிருந்து) காரியங்கள் உண்டாவதாம். ஆதலின்,

அந்த மாதி = சங்காரத் தொழிலைச் செய்கின்ற சிவனே சிருட்டிக்கின்றார் (இவ்வாறாகலின் சிவனே முத்தொழிலுடையவர் முதற்காரணம் முதற் கடவுள் என்று),

என்மனார் புலவர் = சுவானுபவமுள்ள சிவ ஞானிகள் கூறுவார்கள்.

(விசேடம்) மலத்துளதாம் என்றதால் :— தூல சரீரமுதல் நாத பரியந்தமான பாசக் கூட்டங்கள் யாவும் தோற்றிய முறையே ஒடுங்கவும், சீவர்கள் காரண வடிவ சம்ஸ்கார மாத்திரமாய் ஆணவ மலத்துடன் ஈசுர மாயையாகிய அவ்வியக்தத்தில் லயப்பட்டிருப்பார்கள். அவர்கட்குத் தனுகரணாதிகளுள வாகும்பொருட்டுச் சர்வசங்கார காரணராகிய சிவன் கிருபாநோக்கம் வைத்து மீண்டுஞ் சிருட்டிக்கின்றாரெனக் கொள்க.

உதாரணம் :

அதுதானெப் படியென் றக்கா லனாதியாஞ் சீவ ரெல்லாம்
பொதுவான சுழுத்தி போலப் பொருந்துமவ் வியக்தந் தன்னில்
இதுகால தத்து வப்பேர் ஈசனுட் பார்வை யாலே
முதுமூல சுபாவம் விட்டு முக்குணம் வியக்த மாமே.

என்று வேதாந்த நூலிற் கூறியுள்ளன.

அந்தம் ஆதி என்றதால் :— சங்காரத்தில் †தனது மாயையான அவ்வியக்த சத்தியில் காரிய வடிவ நாம ரூப வுலகம் அவ்வியக்தமாவதும், மீண்டும் காரிய வடிவ நாம ரூப வுலகமாக வியக்தமாவதுமாம்.

---

† சக்தனைத் தவிர சத்தியில்லாததுபோல் சிவசக்திகள் சிவனைத் தவிர வில்லாததினால் தனது மாயை என்றது பொருளாகும்.

மேலும், சேதனத்தினின்றே சடத்தின் தோற்றமும், சேதனத்தினாலேயே சடத்தின் பரிணாமமும், சேதனத்திலேயே சடத்தின் லயமுமாகின்றனவாதலின், சேதனமே வுபாதான காரணமும்; சர்வஞ்ஞத் தன்மையால் (முற்றறிவுடைமையால்) சீவர்களது கர்மங்களை யறிந்து சிருட்டியாதி நடத்துகின்றதால் சேதனமே நிமித்தகாரணமுமாம். ஆகலின், சிவமே எல்லாமாயுள்ளதெனக் கொள்க.

'சேதனசத்தியும், சடசத்தியும் இறைவனிடத்துள்ளன என்பதெவ்வாறு பொருந்துமெனில்' சலனத் தன்மையுள்ள அலைக்கும் கடினத் தன்மையுள்ள நுரைக்கும் சலன சுபாவமுடைய சமுத்திரங் காரணமாவதுபோலும். அல்லது ஒரு புருடன் சரீரத்தில் உணர்ச்சியுள்ளதும் உணர்ச்சியில்லதுமான வுருப்புகளுக்குப் புருடன் காரணமாவதுபோலும், சேதன சத்தி சட சத்திகளுக்கு சிவமே காரணமென வறிக.

சிவம் திரிகாலத்திலும் உள் பொருளான சத்தியம். சிற்சத்தி சிவத்தின் பிரிவின்றியதால் துவைதமாவது மில்லை, பின்ன லட்சணமுமில்லை. ஆனதால், சத்திய லட்சணமுள்ளது. சடசத்தியின் பரிணாமத்தினாலாய காரண காரிய வடிவங்களான துவைதங்கள் சிவத்தின் பின்ன லட்சணமுள்ளதாய் உள்பொருளல்லாதனவாமாதலின் மித்தையாம். மித்தையாப் பொருட்குச் சத்தியப் பொருளான சிவமே சொரூபமாம்.

சித்தியார்

காரிய கார ணங்கண் முதற்றுணை நிமித்தங் கண்டாய்
பாரின்மண் திரிகை பண்ணு மவன்முதல் துணைநி மித்தம்

தேரின்மண் மாயை யாக திரிகைதன் சத்தி யாக
ஆரியன் குலால னும்நின் ருக்குவ னகில மெல்லாம்.

என்றும் கூறியுள்ளது. இது வியாவகாரிக சத்தியத்தில் சிருட்டியாதி தொழிலுக்குத் திருட்டாந்தங் கூறியுள்ளதாம்.

ஒழிவிலொடுக்கம்

தன்னை யறியாது வேறுண்டாய்த் தானறியா
துன்னிலொழி வாமுதிப்பி னென்றுமிலை—சந்நிதிக்கே
அஞ்சுதொழி லாமதனை யானந்த வாக்காலே
கிஞ்சளவு கேட்கலுமா கும்.

உதியா துளதாகி யோங்கிப் பேராமல்
அதிசூக் குமங்குறைந் தாகாமற்—பதையாத
ஆகா யமுங் காலுபோ லசைவற்ற
தேகாண் பரிபூ ரணம்.

என்று கூறியுள்ளது இவ்விரு வெண்பாவிலும். இருந்தவண்ணம் இருக்கும் பாரமார்த்திக சத்தியத்தில் சிருட்டியாதி தொழிலுக்குத் திருத்தாட்டங்ளுடம் கூறப்பட்டுள்ளது காண்க.

இவ்வாறு சிவம் அத்வைதமாய் இருந்தவண்ண மிருக்கக் காரண காரியங்களின் தோற்றங் (சிருட்டியாதி)களுளதாமாகலின் சிவனே முத்தொழிற்குங் காரணமான முதற் கடவுளெனவுங் கொள்க.

எண்மனர் புலவர் என்றதால் :— நூலியற்றும் நாவலர்கட்குப் புலவரென்னும் பெயருண்டாமாதலின், அங்ஙன நூலியற்றுதல் ஞானிகள்பாலுமுண்டாம். புலம்=ஞானம் ஆகலின், ஞானியைப் புலவர் என்றலு மாகும்.

ஞானிகளைப் புலவர்களெனப் புலவர் புராணம் கூறுகின்றதையும் நோக்குக.

சிவம் எல்லாமா யுள்ளதென்பதற் கருள் வாக்குகள் வருமாறு :—

### ஸ்ரீ திருஞானசம்பந்தசுவாமி—தேவாரம்

தேவராயு மசுரராயுஞ் சித்தர் செழுமறைசேர்
நாவராயு நண்ணுபாரும் விண்ணெரிகால் நீரும்
மேவராய விரைமலரோன் செங்கண்மால் ஈசனெனும்
மூவராய முதலொருவன் மேயது முதுகுன்றே.

### ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமி—தேவாரம்.

மண்ணாகி விண்ணாகி மலையு மாகி
வைரமாய் மாணிக்கந் தானே யாகிக்
கண்ணாகி கண்ணுக்கோர் மணியு மாகிக்
கலையாகி கலைஞானந் தானே யாகிப்
பெண்ணாகிப் பெண்ணுக்கோ ராணு மாகிப்
பிரளயத்துக் கப்பாலோ ரண்ட மாகி
எண்ணாகி யெண்ணுக்கோ ரெழுத்து மாகி
எழுஞ்சுடரா யெம்மடிகள் நின்ற வாறே.

### ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமி—தேவாரம்.

மண்ணீர்தீ வெளிகால் வருபூதங்க ளாகிமற்றும்
பெண்ணோடா ணலியாகப் பிறவாவுரு வானவனே
கண்ணாருண் மணியே கடவூர்தனுள் வீரட்டத்தெம்
அண்ணாஎன் னமுதேஎனக் கார்துணை நீயலதே.

ஊனாயுயி ராணாயுட லானாயுல கானாய்
வானாய்நில னாய்கட லானாய்மலை யானாய்
தேனார்வெண்ணெய்த் தென்பால்வெண்ணை
நல்லூரருட் டுறையுள்
ஆனாயுனக் காளாயினி யல்லேனென லாமே.

## ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமி—திருவாசகம்.

வேதமும் வேள்வியு மாயி னார்க்கு
மெய்ம்மையும் பொய்ம்மையு மாயி னார்க்குச்
சோதியு மாயிரு ளாயி னார்க்குத்
துன்பமுமா யின்ப மாயி னார்க்குப்
பாதியுமாப் முற்று மாயி னார்க்குப்
பந்தமுமாய் வீடு மாயி னார்க்கு
ஆதியு மந்தமு மாயி னார்க்கு
ஆடப் பொற்சுண்ண மிடித்து நாமே.

## திருமந்திரம் 1809

தானே படைத்திடுந் தானே அளித்திடுந்
தானே துடைத்திடுந் தானே மறைத்திடுந்
தானே யிவைசெய்து தான்முத்தி தந்திடுந்
தானே வியாபித் தலைவனு மாமே.

## 2967

தானே திசையொடு தேவருமாய் நிற்குந்
தானே வடவரை யாதியுமாய் நிற்குந்
தானே யுடலுயிர் தத்துவமாய் நிற்குந்
தானே யுலகில் தலைவனு மாமே.

## 386

புவனம் படைப்பான் ஒருவன் ஒருத்தி
புவனம் படைப்பார்க்குப் புத்திரர் ஐவர்
புவனம் படைப்பானும் பூமிசை யானாய்
புவனம் வடைப்பானப் புண்ணியன் தானே.

## சித்தியார்

ஒருவனோ டொருத்தி ஒன்றென் றுரைத்திடு முலக மெல்லாம்
வருமுறை வந்து நின்று போவதும் ஆத லாலே
தருபவன் ஒருவன் வேண்டுந் தான்முதல் ஈறு மாகி
மருவிடும் அநாதி முத்த சித்துரு மன்னி நின்றே.

*என்று கூறியுள்ளன.*

தேவாரம், திருவாசகம், திருமந்திரம் முதலான வற்றில் இங்கு காட்டியுள்ளது போன்ற இன்னும் அநேக திருவாக்குகளினாலும் இறைவன் எல்லா மாயும், முதல்வனாயுமிருந்து சிருட்டி முதலிய நடத்துவதாக உணரலாம்.

(தாத்பர்யம்) சிகாரப் பொருளான சிவமே எல்லாமா யிருத்தலால் அபின்ன நிமித்தோபாதான காரண முதற்கடவுள் எனக் கூறியதாம்.

(அவதாரிகை) சிகாரப் பொருளான சிவன் எல்லாமா யிருப்பவரென்று முற்கூறிய பொருளை அனுவதித்துக் கர்த்தாவாகிய சிவன் இருந்த வண்ணமேயிருக்க, சிருட்டியாதி செய்வதில் வ,காரப் பொருளான சிற்சத்தியே காரணமென்றும், அவை களில் சம்பந்த மில்லாதிருத்தலை அல்லதுமா யிருப் பவர் என்று மிதிற் கூறுகின்றார்.

---

## இரண்டாஞ் சூத்திரம்.

அவையே தானேயா யிருவினையிற்
போக்கு வரவு புரிய வாணையில்
நீக்க மின்றி நிற்கு மன்றே.

(இ—ள்.) அவையே யாய் = சிவன் தன் சக்தி யினால் அவன், அவள், அது வென்னும் முக்கூற்றுலக மாயும், (அதாவது) அவற்றிற்கு உபாதான காரண மாயும்,

தானேயாய் = உலகுக்கு வேறுபோல், கர்த்தாவாய் முற்றறிவுடைய முதல்வனேயாய் அதாவது நிமித்த காரணராயுமுள்ள சிவன்;

நீக்கமின்றி நிற்கும்=தன்னிற் பிரிவின்றி யிராநின்ற,

ஆணையில்=ஆஞ்ஞா சக்தியினுல்(சிற்சத்தியினுல்),

இருவினையில் = (தன் அவ்வியக்த சத்தியில் ஆணவ மலத்துடன் அடங்கியிருக்கும்) சீவர்களது புண்ணிய பாப கர்மங்களை அநுசரித்து (அறிந்து);

போக்கு வரவு புரிய = தேவர், மனிதர் முதலிய எழுவகைப் பிறவியிலும் போதல் வருதலான சரீரங்களைத் தரிக்கச்செய்து அச்சரீரங்களா லுளதாகுஞ் சுக துக்கங்களைச் சீவர்கள் அனுபவித்துத் திரும்படியாக சிருட்டி முதலியன செய்கின்ருர்.

(விசேடம்) அவையே தானேயாய் என்றதால்:- இறைவன் காரிய வடிவ வுலகமாகவும், உபாதான நிமித்த காரணங்களாகவு மிருத்தலால் எல்லாமாயெனவும், எல்லாமா யிருந்தும் காரிய காரணங்களில் சம்பந்தமின்றிப் பற்ரு திருத்தலால் அல்லதுமாயெனவும் அறிக.

எங்ஙனமெனில், ஆகாயமானது மற்றைய நான்கு பூதம் பூத காரியங்களில் உள்ளும் புறம்பும் அணுமாத்திரமும் இடையின்றி வியாபித்திருந்தும், அவைகளின் உற்பத்தி நாச முதலிய விகாரங்களின் சம்பந்தமின்றி அசங்கமாயிருத்தல்போல, சிவமாகிய சிதாகாய சொரூபம் காரிய காரண நாம ரூப வுலக

மாகிய சடம் சேதனம் முழுவதிலும் உள்ளும் புறம்பும் அணுமாத்திரமும் இடையின்றி வியாபித்திருந்தும், அவைகளின் உற்பத்தி திதி நாச விகாரங்களின் சம்பந்தமின்றி நிர்விகாரமாய் அசங்கமாயிருத்தலால் எல்லாமா யல்லதுமா யுளதென சிவஞானிகள் அனுபவத்தி லுணர்வர்.

ஆணையில் என்றதால்:- (இவ்வாறுன) இறைவன் தன் சிற்சத்தி (அபின்ன சத்தி)யினால் நிமித்த காரணமும், சட சத்தி (பின்ன சத்தி)யினுல் உபாதான காரணமு மாகின்றூர். ஆனதால், எவ்வித சம்பந்தமும், பரிணும விகாரமும் இறைவனுக்கில்லை.

அரசனது அதிகாரத்துக்குள்ள விகாச சங்கோசங்கள் அரசனுக் கில்லாததுபோலு முணர்க.

> ஐவகை சத்தியினு லைந்தொழிலு மாருயிர்க்காய்ச்
> செய்யாமற் செய்யுஞ் சிவம்.
>
> வானிரவி சந்நிதியில் மரைமலர்ந்து வாடிடினும்
> வானிரவிக் குண்டோ மயல்.

என்று வள்ளலார் கூறிய கூற்றையு மறிக.

இருவினை என்றதால்:-இறைவன் கருணையினுல் சீவர்களின் சஞ்சித கர்மத்தின் பரிபாகமறிந்து சிருட்டித்தல், சுக துக்கத்துக் கேதுவான நல்வினை தீவினைகளை யறிந்து சுக துக்கங்களை அனுபவிக்கும்படி திதி செய்தல், பிராரத்த கர்ம முடிவறிந்து சங்காரஞ் செய்தல்,அவரவர் கர்மத்தை அனுசரித்தவை யெனக் கொள்க.

அபின்ன சத்தியை:- சிற்சத்தி, அருட்சத்தி, பராசத்தி முதலிய பெயருடையதாகவும்,

*பின்னு சத்தியை:— சடசத்தி, மூலப் பிரகிருதி, விந்து, மாயை, அவ்வியக்தம் முதலிய பெயருடைய தாகவும் நூல்கள் கூறுகின்றன.*

*(கர்மத்தை அனுசரித்து சிருட்டித்தலால் பட்ச பாதம் இறைவனுக்கில்லை)*

*இருவினையை துணைக்காரண மென்பர்.*

*சிவஞானிகளுக்கு வியாவகாரிக திருஷ்டியில் எல்லாமாய், பாரமார்த்திக திருஷ்டியில் அல்லதுமாய் சிவம் விளங்கும் என்பதாம்.*

சித்தியார்

உலகெலா மாகி வேறாய் உடனுமா யொளியா யோங்கி
அலகிலா வுயிர்கள் கன்மத் தாணையின் அமர்ந்து செல்ல
தலைவனு யிவற்றின் தன்மை தனக்கெய்த லின்றித் தானே
நிலவுசீ ரமல னுகி நின்றனன் நீங்கா தெங்கும்.

*இதன் கருத்து:— இறைவன் எல்லாமா யிருப்ப தாகிய சகுண சொரூபத்தையும், அவற்றில் பற்றுமல் அல்லதுமா யிருப்பதாகிய நிர்க்குண சொரூபத்தையும் கூறியுள்ளது.*

*சுத்த சைவத்துறையில் நின்ற ஞானிகள் வியாவ காரிக திருஷ்டி பாரமார்த்திக திருஷ்டி என்னும் இவ் விரு பார்வையினுல் சகுணமாகவும், நிர்க்குணமாகவும் பதியாகிய இறைவனை வர்ணிக்கின்றனர்.*

*சிவன் எல்லாமா யிருந்தும், அல்லதுமா யிருக் கின்றுனென்பதற் கருள் வாக்குகள் வருமாறு:*

ஸ்ரீ திருஞானசம்பந்த சுவாமி—தேவாரம்.

பற்றுமாகி வானுளோர்க்குப் பல்கதிரோன் மதிபார்
எற்றுநீர் தீகாலு மேலைவிண்இய மானனொடு
மற்றுமாதோர் பல்லுயிராய் மாலயனு மறைகள்
முற்றுமாகி வேறுமானுன் மேயது முதுகுன்றே.

ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமி—தேவாரம்.

மண்ணல்லை விண்ணல்லை வலய மல்லை
மலையல்லை கடலல்லை வாயு வல்லை
எண்ணல்லை எழுத்தல்லை யெரியு மல்லை
இரவல்லை பகலல்லை யாவு மல்லை
பெண்ணல்லை ஆணல்லை பேடு மல்லை
பிரிதல்லை யானுயும் பெரியாய் நீயே
உண்ணல்லை நல்லார்க்குத் தீயை யல்லை
உணர்வறிய ஒற்றியூர் உடைய கோவே.

ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமி—திருவாசகம்.

இன்பமுந் துன்பமு மில்லானே யுள்ளானே
அன்பருக் கன்பனே யாவையுமா யல்லையுமாய்
சோதியனே துன்னிருளே தோன்றுப் பெருமையனே
ஆதியனே யந்த நடுவாகி யல்லானே.

அண்ணு மலையா னடிக்கமலஞ் சென்றிறைஞ்சும்
விண்ணோர் முடியின் மணித்தொகைவீ றற்றாற்போற்
கண்ணு ரிரவி கதிர்வந்து கார்கரப்பத்
தண்ணு ரொளிமழுங்கி தாரகைக டாமகலப்
பெண்ணுகி யாணுய் அலியாய்ப் பிறங்கொளிசேர்
விண்ணுகி மண்ணுகி யித்தனையும் வேருகிக்
கண்ணு ரமுதமுமாய் நின்ருன் கழல்பாடிப்
பெண்ணேயிப் பூப்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய்.

திருமந்திரம் 10

தானே இருநிலந் தாங்கிவிண் ணுய்நிற்குந்
தானே சுடும்அங்கி ஞாயிறுந் திங்களுந்
தானே மழைபொழி தையலு மாய்நிற்குந்
தானே தடவரை தண்கட லாமே.

2003

தானே விரிசுடர் மூன்றுமொன் றுய்நிற்குந்
தானே யயன்மா லெனநின்று தாபிக்குந்
தானே யுடலுயிர் வேறன்றி நின்றுளன்
தானே வெளியொளி தானிருட் டாமே.

13

மண்ணளந் தான்மல ரோன்முதல் தேவர்கள்
எண்ணளந் தின்ன நினைக்கிலார் ஈசனை
விண்ணளந் தான்தன்னை மேல்அளந் தாரில்லை
கண்ணளந் தெங்குங் கடந்துநின் றானே

33

பதிபல வாயது பண்டிவ் வுலகம்
விதிபல செய்தொன்று மெய்மை யுணரார்
துதிபல தோத்திரஞ் சொல்ல வல்லாரும்
மதியிலர் நெஞ்சினுள் வாடுகின் றாரே.

2722

எங்குந் திருமேனி எங்குஞ் சிவசத்தி
எங்குஞ் சிதம்பரம் எங்குந் திருநட்டம்
எங்குஞ் சிவமா யிருத்தலால் எங்கெங்குந்
தங்குஞ் சிவனருட் டன்விளை யாட்டதே.

2335

இல்லதும் உள்ளதும் இயாவையுந் தானாகி
இல்லதும் உள்ளது மாயன்றும் அண்ணலைச்
சொல்லது சொல்லிடில் தூரரதி தூரமென்
றெல்லை யுணர்ந்தால் உயிர்க்குயி ராகுமே.

*தேவாரம், திருவாசகம், திருமந்திரம் முதலிய வற்றில் இன்னும் அனேக திருவாக்குகளினாலும் இறைவன் எல்லாமாய் இருப்பவர், சிருட்டி முதலிய*

செய்பவர், சிருட்டி முதலியன செய்தும் அவற்றில் சம்பந்தமில்லாமல் அல்லதுமா யிருப்பவர் என்னும் உண்மையை சுத்தமான புத்தியுடன் ஊன்றி ஆராய்ந்து (அவனருளாலே அவன்றாள் வணங்கி) உணரலாம் எனக்கொள்க.

(தாற்பர்யம்) சிவாயநம வென்னும் பஞ்சாட்சரத்திலுள்ள சிகாரப் பொருளான சிவமும்; வகாரப் பொருளான அருட்சத்தியும் ஓரே லட்சணமுள்ளன வாய் பிரிப்பின்றி ஓரே சொரூபமாம். ஆகலின், சிவனே முத்தொழிலுக்கும் காரணமென்று தடஸ்த லட்சணத்தால் (பொது இயல்பு லட்சணத்தால்) இவ் விரு சூத்திரமும் பதியியல்பைக் கூறியதாம்.

(அவதாரிகை) உலகிற்கு காரணமான கர்த்தா பதி என்று முற்கூறி இதில்யகாராட்சரப் பொருளான ஆன்மா தேகத்திற்கு வேருய்த் தேகத்திலிருந்து தேகேந்திரியாதிகளை சடமென வறிகின்றவனுயுள னென்று கூறுகின்ருர்.

---

## மூன்ருஞ் சூத்திரம்.

உளதில தென்றலி னெனதுட லென்றலின்
ஐம்புல னொடுக்க மறிதலிற் கண்படில்
உண்டி வினையின்மையி லுணர்த்த வுணர்தலின்
மாயா வியந்திர தனுவினு ளான்மா.

(இ—ள்) இலது என்றலின் உளது = ஆன்மா இல்லை, இருந்தால் தோன்ருதா? தோன்றப்படாமை யின் ஆன்மா இல்லை என்று கூறுகின்ற சூனியவாதியை

நோக்கி சூன்யம் என்று அறிகின்றவனுகிய ஆன்மா, சூனியத்திற்கு வேருக வுள்ளது.

எனது உடல் என்றலின் = சாக்கிரத்தில் தேகேந் திரியாதிகள் என்னுடையதென்று மமதைக்கு விஷய மாக அறியப்படுகின்றமையின் தூல தேகத்திற்கு வேருக ஆன்மா உளது,

ஐம்புல னொடுக்கம் அறிதலின் = ஸ்திரமான சப்த பரிச ரூப ரச கந்தங்களை அறிகின்ற சுரோத்திராதி ஐந் திந்திரியங்களும் ஒடுங்கிய சொப்பனத்தில் அஸ்திர மான சப்த பரிச ரூப ரச கந்தங்களை அறிகின்றமை யின் இந்திரியங்களுக்கு வேருக ஆன்மா வுளது.

கண்படில் = சொப்பனம் ஒடுங்கிய வுறக்கத்தில் (சுழுத்தியில்),

உண்டி, வினை, இன்மையின் = பசி தாகாதி தர்ம முடைய பிராண னுயிர்த்திருந்தும் உண்ணுத லின்மையினலும், கர்த்திருத்வாதிதர்மமுடைய மனம் காரண வஞ்ஞானத்தில் லயப்பட்டிருத்தலின் நல் வினை, தீவினை, சுகம், துக்கம் முதலியன இன்மையி னலும், பிராணனுக்கும் மனதுக்கும் வேருக ஆன்மா வுளது,

உணர்த்த உணர்தலின் = ஆன்மா சுழுத்தியில் சுகத்தையும் அறியாமையையும் அனுபவித்து அவ் வனுபவம் ஸ்மிருதி ரூபமாக சாக்கிரத்தில் உணர்த்து தலின் சுகமாய்த் தூங்கினேன் ஒன்றுமறியேன் என் றறிந்து கருவிகளுடன் சேர்ந்து சொல்லுகின்ருன். ஆதலின் அஞ்ஞானத்துக்கு (காரண சரீரத்துக்கு) வேருக ஆன்மா வுளது.

*மாயாவியந்திர தனுவினுள் ஆன்மா*=இவ்வாருக் *நியதி களாகின்றவனுய் மாயா காரியமாகிய தேகத்தில் அணுவாகிய ஆன்மா வுள்ளது.*

(விசேடம்) *உடல் என்றதால்:– தூல சூட்சும காரண சரீரம் மூன்றையுங் கொள்க.*

*ஆட்டுவிக்க ஆடுகின்றது என்பது தோன்ற, இயந்திரமென்றனர்.*

*ஆன்மா என்பது கடைநிலை தீபகம்,*

*பசுவியல்பு கூறுகின்ற திருவாக்குகள் வருமாறு:*

திருமந்திரம் 2423

பாசம் பயிலுயிர் தானே பரமுதல்
பாசம் பயிலுயிர் தானே பசுவென்ப
பாசம் பயிலப் பதிபர மாதலாற்
பாசம் பயிலப் பதிபசு வாகுமே.

448

அகன்ருன் அகலிடம் ஏழுமொன் ருகி
இவன்ரு ளௌனநின் றெளியனும் அல்லன்
சிவன்ருன் பலபல சீவனு மாகி
நவின்ருன் உலகுறு நம்பனு மாமே.

வள்ளலார் சாத்திரம்

பிண்டமா முடனு னல்லேன் பிராணவா யுவுநா னல்லேன்
கண்டவிந் தியநா னல்லேன் கரணமோர் நான்கு மல்லேன்
பண்டைய வறிவே நானென் றுணர்தரு பருவம் வாய்ப்பின்
வண்டறை கொன்றைத் தாரான் மலரடி காண லாமே.

எண்ணரிய ஆன்மாக்க ளிலக்கணங் கூறுங்கால்
இருண்மலத்தால் மூடரா யிறந்துபிறந் துழல்வார்
புண்ணியத்தாற் பாவத்தாற் புண்ணிய பாவத்தாற்
பொன்னாடு நரகுதரைப் போக்குவர வுடையார்
நண்ணியவிஞ் ஞானகலர் பிரளயா கலர்கள்
நவில்சகல ரொன்றிரண்டு மூன்றுமல முடையார்
தண்ணிலவு மதிமுடியார் அருளுதய காலஞ்
சாங்குசித்த ராய்மலத்தைத் தணந்துசிவ மாவர்.

இவற்றானும் ஆன்ம விலக்கணம் போதமாம்.

(தாற்பர்யம்) சூனியம், தேகம், இந்திரியங்கள், பிராணன், மனம், புத்தி, அஞ்ஞானம் இவைகளுக்கு வேறாக இவைகளை அறியப்படும் பொருளாகிய சடமென்று அறிகின்றவனும் தேகத்தில் ஆன்மா வுளன் என, யகாரப் பொருளான பசு இயல்பைக் கூறினதாம்.

---

(அ—கை.) நகாராட்சரப் பொருளான ஆணவ மலம் ஆன்மாவுடன் சமவேதமாயிருந்து மறைத்த லால் ஆன்மா தன்னை யறியாதென்றும், மனதும் ஆன்மாவும் ஐந்தவத்தையிலுமிருக்குந் தன்மையை யுங் கூறுகின்றார்.

## நான்காஞ் சூத்திரம்

அந்தக் கரண மவற்றினொன் றன்றவை
சந்தித்த தான்மா சகசமலத் துணரா
தமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே.

(இ—ள்) அந்தக்கரணம்=மனம், புத்தி, சித்தம், அகங்காரமென்னும் அந்தக்கரணங்கள்,

அவற்றின் அவைகளில்,

ஒன்றன்று=சங்கற்ப விகற்பஞ் செய்கின்ற மனதும், நிச்சயிக்கின்ற புத்தியும், சிந்தனை செய்கின்ற சித்தமும், நான் என்றபிமானிக்கின்ற அகங்காரமும் அறியப்படுகின்ற சடமாயுள்ளதனால் ஒன்றும் ஆன்மாவல்ல.

அவை சந்தித்தது= அறியப்படும் பொருளாகிய அவ்வந்தக் கரணங்கள் வேறாயிருந்தும் ஆன்மாவுடன் தாதாத்மிய சம்பந்தமாய் (சமவேதமாய்) இருப்பதினால், ஆன்மா சகசமலத்துணராது= ஆன்மா ஆணவ மலத்தால் தகையப்பட்டு (மறைக்கப்பட்டு) அணுவாய்ப் பசுத்தன்மை (தற்போதம்) உள்ளவனாக விருத்தலால் தன் நிஜ சொரூபத்தை யறிவதில்லை.

அமைச்சு அரசு ஏய்ப்ப நின்று = மந்திரியை சூட்சித் துணையாகக் கொண்டு அரசு புரியும் ராஜாவைப் போல அதாவது, ஆஞ்ஞையின்படி மந்திரி செய்யும் வியவகாரத்தில் சம்பந்தமில்லாமல் சாட்சியாயிருக்கின்ற அரசனைப்போல. ஆன்மா அந்தக்கரண வியவகாரத்துக் கேதுவாய், அதன் விகாச சங்கோச வியவகாரத்தில் சம்பந்தமில்லாமல் சாட்சியா யிருப்பவனாய்,

அஞ்சு அவைத்தைத்தே சாக்கிரம்,சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்னும் ஐந்தவத்தையிலும் உளன்.

(விசேடம்) சகசமலம் என்றதால் :- ஆணவம் மாயை கன்மம் என்னும் மும்மலமும் கொள்க.

மும்மலத்தின் வசமாக ஆன்மா இருப்பதினுல் ஆன்மாவைப் பசுவென்று கூறுவர்.

அம் மூன்று மலமும் தேகத்தினுள்ளே சாட்சியாகிய சிவசொரூபத்தைப் பசுவாகிய ஆன்மாவுக்கு விளங்கவொட்டாமல் மறைப்பனவாம்.

அஞ்சு அவத்தை என்றதால்:- ஒரு அவத்தையுள்ளபோது மற்ற நான்கவத்தை இல்லாதனவாகின்றன. ஆன்மா அவ் வைந்தவத்தையிலும் தொடர்ந்திருந்து அந்தந்த அவத்தைகளின் அந்வய வெதிரேகங்களை (உண்மை இன்மைகளை) அறிகின்ருன் ஆனதால், அவ்வவத்தைகளுக்கு வேருக ஆன்மா வுளனென வறிக.

அல்லாமலும், சகல கேவலமாகிய சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்னும் மூன்றவத்தையிலும், ஆன்மா தூலமான வுருவ மனதுடன் அஞ்ஞான வசமாய் ஆணவாதி மலமுடையவனுய்த் தன்னையறியாமல் பந்தமுள்ளவனு யிருப்பன்.

நின்மலமாகிய துரியம். துரியாதீதம் என்னு மிரு வவத்தையிலும் ஞானத்தினுல் அஞ்ஞானம் நாசமாகி மலமின்றியவனுய்ப் பந்தம் விடுபட்டு தனது நிஜ ஸ்வரூபத்தை யறிந்து முத்தனுய் அருவ மனதுடன் அருள் வசத்தனுய் ஆனந்தானுபவமுள்ளவனு யிருப்பன். இவ்வா றைந்தவத்தையிலும் ஆன்மா வுளனென வறிக.

தேகேந்திரியாதிகள், பஞ்சகோசங்கள் சாக்கிராதி அவத்தைகள் இவைகளின் உற்பத்தி, இடம், காலம், செய்கை, தர்மம் முதலிய விபரங்களைக் கீழ் நூல்களில் அறிக.

*பசுவாகிய ஆன்மாவுக்கு மும்மலமும். ஐந் தவத்தைகளுமுள்ளன என்பதற்கு மேற்கோள் :*

## திருமந்திரம் 2192

ஆணவ மாயையுங் கன்மமு மாமலங்
காணு முளைக்குத் தவிடுமி யான்மாவுந்
தாணுவை யொவ்வாமற் றண்டுல மாய்நிற்கும்
பேணுவாய் மற்றுநின் பாசம் பிரித்தே.

2296

சாத்திக மெய்து நனவெனச் சாற்றுங்கால்
வாய்த்த இராசத மன்னுங் கனவென்ப
ஒய்த்திடுந் தாமதம் உற்ற சுழுத்தியாம்
மாய்த்திடு நிர்க்குண மாசில் துரியமே.

2142

ஐயைந்து மத்திமை யானது சாக்கிரங்
கைகண்ட பந்நான்கிற் கண்டங் கனவென்பச்
பொய்கண் டிலாத புருடனிதயம் சுழுனை
மெய்கண்ட வனுந்தி யாகுந் துரியமே

2264

தன்னை யறியா துடலைமுன் தானென்றான்
தன்னைமுன் கண்டான் துரியந் தனைக்கண்டான்
உன்னுந் துரியமும் ஈசனோ டொன்றாக்கால்
பின்னையும் வந்து பிறந்திருந் தானே.

## ஆணவ மலத்தின் தன்மை

ஆணவ மலமான் மாவுக்கு அனுதியி லியற்கை யென்னின்
மாணவ சங்கின் வெள்ளை போலொருக் காலு மாயா
ஆணவ மலமான் மாவுக் கனுதியிற் செய்கை யென்னிற்
காணும்வெண் மடிக் கழுக்குக் கலத்தல்போற் பினும்வந்
தெய்தும்.

வீணுரைக் கரும்பு மீசன் மெய்யுரை வேம்பு மாகும்
தாணுவை யிறைஞ்ச லொட்டா தைபலை யிறைஞ்சப் பண்ணும்
காணற யிரத்தல் செய்யும் நல்லவர்க் கீதல் செய்யா
ஆணவ மலத்தின் செய்தி யிவ்வண்ண மறிந்து கொள்ளே.

சரிதையி லாணவங் கால் சரிந்திடுங்
கிரியையி லரைமலங் கெடுதி யுற்றிடும்
மருவு யோகத்தின் முக்கான் மடங்கிடும்
விரிசிவ ஞானத்தின் முற்றும் வீயுமே.

*என்று வள்ளலார் கூறியுள்ளார்.*

(தா—ம்) *நகாராட்சரப் பொருளான ஆணவ மலத்தின் செய்கையைக் கூறினதாம்.*

---

(அ—கை) *முற்கூறிய ஆணவ மலத்தால் பசுத் தன்மை யடைந்த சீவன் மகாராட்சரப் பொருளான திரோதாயி மலத்தால் தன்னையும், தலைவனையும் அறியான் எனவும், இறைவன் அறிவிக்க அறிகின்றா னெனவுங் கூறுகின்றார்.*

## ஐந்தாஞ் சூத்திரம்.

*விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்*
*களந்தறிந் தறியா வாங்கவை போலத்*
*தாந்த முணர்வின் தமியருள்*
*காந்தங் கண்ட பசாசத் தவையே.*

(இ—ள்) *விளம்பிய உள்ளத்து = முற்கூறிய சீவனால்,*

மெய் வாய் கண் மூக்கு=சுரோத்திரம், துவக்கு, சட்சு, சிங்ஙவை ஆக்கிராண மென்கின்ற ஞானேந் திரிய மைந்தும்,

அளந்து அறிந்து=தத்தம் விஷயங்களான சப்த பரிச ரூப. ரச கந்தங்களைத் தனித்தனிப் பகுத்தறி கின்றன.

ஆங்கு அவை அறியாபோல் = அவ்வாறறிகின்ற அவ்விந்திரியங்கள் தம்மையும், தம்மை அதிட்டித்து நின்று விஷயங்களில் செலுத்துகின்ற சீவனையும் அறி யாது. அதுபோல,

தாம் தம் உணர்வின்=சீவன் இந்திரிய வாயிலாக விஷயங்களை அறிகின்றான். அவ்வாறறிவதும் இருதயத்தில் சாட்சியாகப் பிரகாசிக்கின்ற சிவத் தினால் அறிகின்றான்; தன்னுணர்வால் தன்னையும் அறியான்; தன்னை அதிட்டித்து அறிவிக்கின்ற சிவத்தையும் அறியான்,

தமி அருள்=ஒப்பற்ற அருளுடைய பிரத்தியக் சாட்சியான சிவம் அறிவிக்க அறிகின்றான்.

அவை=சீவர்கள் அவ்வாறறிவதும்,

காந்தம் கண்ட பசாசத்து=காந்தக்கல்லின் முன் இரும்பு சேட்டித்தல் போலச் சிவத்தின் சந்நிதானத் தில் சீவர்கள் சேட்டித்தலாம்.

ஏ என்பது தேற்றம். (நிச்சயப்பொருள் ஆகலின் சிவம் விகாரியாதலில்லை)

(விசேடம்) மெய் வாய் கண் மூக்கு (இந்திரியங் கள்) அளந்தறிந்தறியா என்றதால்:- அந்தக்கரணங்

களும் சிவ சம்பந்தமின்றி அறியாதென்பது உப லட்சணமாம்.

தன்னுணர்வால் சிவத்தை அறியானென்னும் அர்த்தத்தால் திரோதாயி மலமுளதெனக் கொள்க, இதனால் மாயேய மலமுங் கொள்க.
இவ்விருமலமும் இறைவன் வசமாயுள்ளனவாம்.

ஆன்மா திரோதாயினால் மறைக்கப்பட்டவனும் அருளா லுணர்த்தப்பட்டவனுமாகின்றான்.

காந்தம் கண்ட பசாசம் என்றதால்:- காந்தமானது செய்கையற்று இருந்தபடி இருக்க, இரும்பு சேட்டித்தல் போல இறைவன் யாதொரு கிரியையுமின்றி இருந்தவண்ணம் இருக்க சந்நிதான மாத்திரத்தில் சீவர்கட்குப் பிரவிருத்தியுண்டாமெனக் கொள்க.

இவ்வாறு கிரியையின்றி இறைவன் நிஷ்கிரியனாக விருந்தும் திரோதாயினால் மறைப்பன் அருளால் உணர்த்துவனென்று அறிஞர் கூறுவர்.

திரோதாயி = மறைப்பு, மாயேயம் = மாயா காரியம். திரோதாயி, மாயேயம் இரண்டுஞ் சிவ சத்திகள். இவை சீவர்களைப் பொருந்தி நிற்கும்.

பதி, பசு, பாசம் மூன்றும் அநாதி (ஆயினும்) பதிஞானம் அணிகில் பசுத்தன்மையும், பாசமும் நில்லாது என்பதற்கு யுக்தி,

(பசுத்தன்மை என்பது தற்போதம்)

இருள் அநாதியா யிருந்தாலும் பிரகாசம் அணுகில் இருள் நில்லாது என்பது போலும்,

அநாதியாயுள்ள பிராகாபாவத்துக்கு அந்தம் (நாசம்) உண்டாவதுபோல, அநாதியாயுள்ள அஞ்ஞான பாசத்துக்கு சிவஞானத்தால் அந்த (நாசம்) உண்டாமென வுணர்க.

மலங்களாகிய பாசத்தின் இயல்பைக் கூறுகின்ற ஆன்றோர் திருவாக்குகள் வருமாறு :

சித்தியார்

மாயையின் காரி யத்தை மாயேய மலம தென்றும்
ஏயும்மும் மலங்கள் தத்த மெழிலினை இயற்றும் ஏவும்
தூயவன் தனதோர் சத்தி திரோதான கரிய தென்றும்
ஆய்வரிம் மலங்க ளைந்து அணுக்களை அணைந்து நிற்கும்.

திருமந்திரம் 115

பதிபசு பாச மெனப்பகர் மூன்றில்
பதியினைப் போற்பசு பாசம் அநாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கிற்பசு பாசம் நிலாவே.

2428

சிந்தையி னுள்ளே எந்தை திருவடி
சிந்தையும் எந்தை திருவடிக் கீழது
எந்தையுந் என்னை யறியகி லானாகில்
எந்தையை யானும் அறியகி லேனே.

2710

சிவன்சத்தி சீவன் செறுமல மாயை
அவஞ்சேர்த்த பாச மலமைந் தகலச்
சிவன்சத்தி தன்னுடன் சீவனார் சேர
அவஞ்சேர்த்த பாசம் அணுககி லாவே.

2413

பதியும் பசுவொடு பாசமும் மேலைக்
கதியும் பசுபாச நீக்கமுங் காட்டி
மதிதந்த வானந்த மாநந்தி காணுந்
துதிதந்து வைத்தன்ன் சுத்தசை வத்திலே.

2962

ஒன்றுகண் டீர்உல குக்கொரு தெய்வமும்
ஒன்றுகண் டீர்உல குக்குயி ராவது
நன்றுகண் டீர்இனி நமசிவா யப்பழம்
தின்றுகண் டேற்கிது தித்தித்த வாறே.

(நூ—ம்) நகாரப் பொருளான ஆணவமலத்திற்குப் போல மகாரப் பொருளான திரோதாயி மலத்திற்கும் சடம் முதலிய இலக்கணங்கள் ஒரு தன்மையினவாகலின் ஒருமித்துப் பாசம் என்பதாகப் பாச இயல்பைக் கூறினதாம்.

(இதுவரை சிவ என்பது பதி என்றும், ய என்பது பசு என்றும், நம என்பது பாசம் என்றும், பஞ்சாட்சரத்திற்கு முப்பொருள் கூறப்பட்டது. இதனை,

அஞ்செழுத்தினி லொருபுடை யரும்பதி யாகும்
வஞ்சமுற்றுள வொருபுடை பாசமாய் வதியும்
துஞ்சலின்றிய வொருபுடை பசுவெனத் துலங்கும்
அஞ்செழுத்தினின் மும்முத லறிந்தவர் பிறவார்.

என்று வள்ளலார் கூறியுள்ளனர்)

---

(அ—கை.) முன் ஐந்து சூத்திரங்களினால் பஞ்சாட்சரப் பொருளை பதி பசு பாசமென முப்பொருளாக அறிவித்து, அம் முப்பொருளில் சிவவெனும் பதப்பொருளான பதியின் சிறப்பியல்பாகிய சொரூப லட்சணமும், நமவெனும் பதப்பொருளான பாசத்தின் இயற்கை லட்சணமும் இதிற் கூறுகின்றார்.

## ஆறுஞ் சூத்திரம்.

**உணருரு வசத்தெனி லுணரா தின்மையின்**
**இருதிற னல்லது சிவசத் தாமென**
**இரண்டு வகையி னிசைக்குமன் னுலகே.**

(இ—ள்.) உணர்வுரு எனில் = பதியாகிய சிவம் அறியப்படும் பொருளென்று கூறில்,

உணராது = சடப்பொருள்போல அறியுந்தன்மை இலதாகும்;

அசத்து எனில் = பதியாகிய சிவம் அறியப்படாத பொருள் என்று கூறில்,

இன்மையின் = முக்காலத்திலும் சொரூபமின்றிய முயற்கொம்புபோல சூனியமாகும்.

(அறியப்படுவது சடமாம்; அறியப்படாதது அசத்தாம்.) ஆதலின்,

இருதிறன் அல்லது = அசத்து சடம் ஆகிய இரண்டு தன்மையும் அல்லாதது,

சிவசத்தாமென = பதியாகிய சிவம் சத்து சித்து ஆனந்த ரூபம் என்பதாக,

இரண்டு வகையின் = சிவம் சத்து சித்து ஆனந்த சொரூபம் என்றும், காரண காரிய பாசம் அசத்து சடதுக்க வடிவமென்றும், இவ்விரு வகையினதாக,

மன்னுலகு இசைக்கும் = சத்து அசத்து விவேக முள்ள உண்மை உணர்ந்த ஞானிகள் கூறுவர்.

(விசேடம்) - உணர்வுரு அசத்தெனி லுணராதின் மையின் என்றதால்:- கடம்போல அறியப்படுகின்ற

காரிய பாசமும்; முயற்கொம்பு, வான்மலர்போல் அறியப்படாத காரண பாசமும் என்று பாசத்தை இருவிதமாய்க் கூறுவர்.

எது சடமோ அதற்கு அசத்துத் தன்மையும், எது அசத்தோ அதற்கு சடத் தன்மையும், எது அசத்தும் சடமுமாமோ அதற்குத் துக்கத் தன்மையும் உள்ளன.

இவ்வாறாகலின், காரிய காரண பாசங்கட்கு அசத்து சட துக்க லட்சணமுள்ளதென வறிக.

சிவசத்தாம் என்றதால்:– மூன்று காலத்திலும் உள்பொருளான சிவமே சத்து எனவும், சத்தே ஞான ஸ்வரூப சித்து எனவும், சத்தான சித்தே ஆனந்தம் எனவும், இவ்வாறு நீரின் குளிர் இளகல் வெண்மை போல் ஒரு வடிவமான சத்து சித்து ஆனந்தமே பதி யாகிய சிவத்தின் சொரூப லட்சணமென வறிக.

இதனைக் கீழ் கூறுகின்ற ஆசிரியர்களின் இரு வாக்குகளால் உணர்க.

### சித்தியார்

மண்தனில் வாழ்வும் வானத் தரசயன் மாலார் வாழ்வும்
எண்தரு பூத பேத யோனிகள் யாவும் எல்லாம்
கண்டஇந் திரமா சாலம் கனக்கழு திரதங் காட்டி
உண்டுபோல் இன்றும் பண்பின் உலகினை அசத்தா மென்பர்.

### திருமந்திரம் 1420

சத்தும் அசத்துஞ் சதசத்துந் தான்கண்டு
சித்தும் அசித்துஞ் சேர்வுறு மேநீத்த
சுத்தம் அசுத்தமுந் தோய்வுறு மேநின்று
நித்தம் பரஞ்சுத்த சைவர்க்கு நேயமே.

1431

சத்தும் அசத்துந் தணந்தவர் தாளுகிக்
சித்தும் அசித்துந் தெரியாச் சிவோகமாய்
முத்திவுள் ஆனந்த சத்தியுள் மூழ்கினுர்
சித்தியு மங்கே சிறந்துள தானே.

2058

சத்தும் அசத்துஞ் சதசத்துந் தான்காட்டிச்
சித்தும் அசித்துஞ் சிவபரத்தே சேர்த்துச்
சுத்த மசுத்த மறச்சுக மானசொல்
அத்தன் அருட்குரு மாமவன் கூறிலே.

2860

சத்திய ஞானத் தனிப்பொருள் ஆனந்தஞ்
சித்தத்தி னில்லாச் சிவானந்தப் பேரொளி
சுத்தப் பிரம துரியந் துரியத்துள்
உய்த்த துரியத் துறுபே ரொளியே.

(தா—ம்) *பஞ்சாட்சரத்தில் சிவ எனும் பதப் பொருளாகிய பதி சச்சிதானந்த சொரூபமென்றும், நம எனும் பதப் பொருளான பாசம் அசத்து சடம் துக்க வடிவமென்றுங் கூறினதாம்.*

---

(அ—கை) *முற்கூறிய சச்சிதானந்த லட்சண முள்ள பதியாகிய சிவம் எல்லாமாய் அல்லதுமாய் அத்வைதமாய் முக்காலத்திலும் உள்பொருளாயுள்ள தெனவும், பாசங்கள் அசத்து சடம் துக்க வடிவமாய் முக்காலத்திலும் இல்பொருளான சூனியமெனவும் உண்மையாயுள்ள பாரமார்த்திக நிலையை விளக்கிப் பந்த மோட்சத்திற்கு அதிகாரி சீவன் என்றுங் கூறுகின்றார்.*

## ஏழாஞ் சூத்திரம்

**யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலின்**
**சத்தே யறியா தசத்தில தறியா**
**திருதிற னறிவுள திரண்டல வான்மா.**

(இ—ள்) சத்து = எல்லாமா யல்லதுமாய் அத்வைதமாய் அருட்சோதி பிரகாசமாயுள்ள சத்து ரூப சிவத்திற்கு,

எதிர் = எதிராக (முன்னுக),

(சூரியன் முன் இருள்போல) அசத்தாகிய வுலகம் நிற்பதில்லை.

ஆகலின் = ஆனதால்,

யாவையும் சூனியம் = காரண காரிய பாசங்களான நாமரூப வுலகங்கள் மூன்று காலத்திலும் தனக்கென சொரூபமின்றியதனுல் அசத்தாம்.

(இருளும் ஒளியும் ஒன்றினையொன்று காணுதது போல் உள்ளதான சத்தும், இல்லதான அசத்தும் ஒன்றினையொன்று காணுதெனக் கூறுகின்ருர்.)

சத்தே அறியாது = சத்து சித்து ஸ்வரூபமான சிவம் தன்னைத் தவிர சொரூபமின்றிய அசத்தான வுலகத்தை அறிவதில்லை.

அசத்து இலது அறியாது = இருப்பின்றிய அசத்தான வுலகம் மூன்று காலத்திலும் இல்பொருள் ஆனதால் சத்து சித்து ஸ்வரூபமான சிவத்தை அறிவதில்லை.

இருதிறன் அறிவு உளது—சிவன் மூன்று காலத்திலும் உள்பொருளாய், அத்வைதமாய், சோதி மயமாய் விளங்குகின்ற மெய்ப்பொருளென்றும், உலகம் முக்காலத்திலும் தனக்கென இருப்பின்றி இல்பொருளாய்த் தோற்றமாத்திரமாகக் காணப்படுந் துவைதம் பொய்ப்பொருளென்றும், இவ்விரண்டு தன்மையையும் அறிகின்றவனாக ஆன்மா வுளன்.

இரண்டல ஆன்மா = சத்து சித்தான பதியின் லட்சணமும், அசத்து சடமான பாசத்தின் லட்சணமும் இல்லாதவன் ஆன்மா (சீவனும்).

(விசேடம்) சத்து எதிர் யாவையும் சூனியம் என்றதால் :— மெய்ப் பொருளான சிவத்திற்கும் பொய்ப் பொருளான உலகத்திற்கும் சமமான லட்சணமில்லை.

(எதுபோலெனில்) சாக்கிரத்தில் ஸ்திரமாகக் காணப்படுகின்ற பஞ்சபூதகாரியங்களாகிய தேக முதலான பொருள்கட்கும் சொப்பனத்தில் அஸ்திரமாகக் காணப்படுகின்ற வாசனாமயமாகிய தேகம் முதலான பொருள்கட்கும், சமமான லட்சணமில்லாதது போலுமாம்.

அல்லது பதியின் உடன்பாடான லட்சணங்களுக்கு எதிர்மறையான லட்சணங்கள் பாசத்திற்குளதென வறிக.

மேலும், அநாதியாய் உள்பொருளான சத்து ரூபமான பதி மெய்ப்பொருள் என்றும், அநாதியாய் இல்பொருளான அசத்தான பாசம் பொய்ப்பொருளென்றும், அவ்வநாதியான அவ்வியக்த பாசத்தைக் காரணமென்றும், அதன் பரிணாமமாய் வியக்தமானதைக் காரியபாசம் என்றும் அறிஞர் கூறுவர்.

ஆகலின், பாசம் காரணமென்றும், காரியமென்றும் இருவகையினதாம்.

உற்பத்தி நாசமுள்ள காரியங்களாகிய பாசம் காலத்தினு லழிகின்றது

அநாதியாயுள்ள காரண பாசம் சிவ ஞானேதயத்தில் (சூரியோதயத்தில் இருள்போல்) அழிகின்றது.

இவ்வாறு காரண காரிய பாச வடிவ வுலகம் அழிகின்றதனுல் பொய்ப்பொருளாம் ஆதலினுல், காரிய பாச வடிவ வுலகம் காரண பாசத்தின் பரிணுமமும் பதியில் விவர்த்தமுமாம்.

ஆனுல், பாச வடிவ வுலகம் பாமரர்களுக்குச் சத்தியமாய்க் காணப்படும் சாஸ்திர ஆசாரியர் வாக்கியத்தில் நம்பிக்கையுள்ள சுத்த சைவத்துறை நெறி நின்ற அப்பியாசிகளுக்குப் பாச வடிவ வுலகம் மித்தையாகக் காணப்படும்.

ஆரூடரான சிவஞானிகளுக்குப் பாச வடிவ வுலகம் துச்சமாம். (இல்லாததாகக் காண்பன்) அதாவது, ஆரோபம், அதிட்டான வடிவமே என்று அறிவதுபோல் பாச வடிவ வுலகத்தைச் சிவமாகவே காண்பன்.

அல்லாமலும், கடத்திற்கு இருப்பு மண்ணே போல் உலகத்திற்கு இருப்பு சிவமே என்றும், அச் சிவமே தானுக அனுபவத்தில் விளங்குவதே அத்வைதமெனவுங் கொள்க.

சிவத்தைத் தவிர இருப்பின்றிய மித்தையாப் பொருள்களிலே காரண காரியமென்றும், ஆண்டான்

அடிமை என்றும், சாதனம் சாத்தியமென்றும், பெத்தன் முத்தனென்றும், இவை முதலிய துவைதங்கள் அனுபவிக்கப்படுகின்றன.

அத்வைதமான மெய்ப்பொருளில் வேறுபாடான துவைதம் எதுவுமில்லை என வறிக.

சாக்கிரத்தில் விழித்தவன் சொப்பனப் பொருளொன்றையுங் காணாததுபோல அத்வைதத்தில் விழித்தவன் துவைதமொன்றையுங் காணான்.

மேலும் அருளால் ஞானக்கண் விளங்கும் நிலையில் முன் கண்டுகொண்டிருந்த வுலகத்தையுங் காணான், தன்னையுங் காணான், தலைவன் றனையே காண்பன். அதாவது, சச்சிதானந்த சிவமே தானாக விளங்குவன். அதுவே அத்வைத அநுபவம். இதனை இரண்டற்ற அநுபவம் எனவுங் கூறுவர்.

இருதிறன் அறிவுளது என்றதால் :- சிவமாகிய பதி உள்பொருளான சத்தியமென்றும், பாசங்கள் இல்பொருளான மித்தை என்றும். இறைவனருளால் அநுபவத்தி லுணர்ந்தவனை ஞானி என்பர்; அவ்வாறுணராதவனை அஞ்ஞானி யென்பர். அஞ்ஞானமுள்ளவன் புண்ணிய புஞ்ச பரிபாகத்தால் பிறவி துக்கத்தை நிவர்த்திக்கும் உபாயத்தையும், பேரின்பமடைவதற்கான வுபாயத்தையும், குரு சாஸ்திராதிகளின் வுபதேச வாக்கியார்த்தங்களால் அறிந்து அனுஷ்டிப்பவனாயுள்ளன் ஆகலின்; பந்தம் முத்தி லட்சணம் அறிபவன் எனினுமாம், மேலும், துரியம் துரியாதீத அனுபவமுள்ளவன் பதி உள்பொருள் பாசம் இல்பொருள் என்றிரண்டினியல்பை அறிவனெனக் கொள்க.

இரண்டல ஆன்மா என்றதாதல் :— பதி லட்சண மாகவாவது அல்லது பாசத்தின் லட்சணமாகவாவது ஒரு தன்மையாயில்லாதவன் ஆன்மா (சீவன்)எனவும்; எப்படி தீபத்தின் ஒளி இருளை நோக்கப் பிரகாசமாயும், சூரியனை நோக்கத் தன் பிரகாச மின்றிச் சூரிய பிரகாசமய மாவதுபோல், சீவன் தேகாதி பாசங்களை நோக்க வேறு சத்து சித்து போலக் காணப்படுவன் சாட்சியாகிய சிவத்தை நோக்கத் தனக்கு இருப்பும் அறிவுமின்றிச் சிவ சொரூபப் பிரகாச மயமாவன், இதனுல் சீவன் ஒரு தகமையாய் சத்து சித்தாக அல்லது அசத்து சடமாக உள்ளவனல்லவெனவும் உணர்க.

மேலும், சீவனுக்கு அந்தக்கரணம் அவித்தைகள் விசேடணமாம். சேதனமாத்திரம் விசேடியமாம் இரண்டும் சேர்ந்த விசிஷ்டனை சீவனென்று கூறப் படும்; லோகாந்த குந்தம்போல, அந்தக்கரணவிருத்தி முனையிலிருந்து சுட்டியறிகின்ற விசேஷணத்தால் சீவனும். சுட்டறிவின்றிய விசேடிய சேதன மாத் திரத்தால் சாட்சியாயு மிருத்தலால் இவற்றில் விசேஷண பாகம் சடமும், விசேடிய பாகம் சித்தும் ஆனதால் சீவனை சிற்சட வடிவமென்றுங் கூறுவர்.

மேலும் சீவன் புறநோக்க முள்ளபோது சித்து போலவும், அகநோக்கமுள்ளபோது சடம்போலவும், ஆகின்றான். ஆதனால், சிற்சட வடிவமென்றுங் கூறுவர்.

இதில் யாவையுஞ் சூனியம் என்றதின் பொருளை கரதலாமலகம்போலத் திருமூலர் கூறுகின்றார்.

திருமந்திரம் 2001

அன்றிய பாச இருளுமஞ் ஞானமுஞ்
சென்றிடு ஞானச் சிவப்பிர காசத்தால்
ஒன்று மிருசுட ராம்அரு ளேதயந்
துன்றிருள் நீங்குதல் போலத் தொலைந்ததே.

2593

கரியுண் விளவின் கனிபோல் உயிரும்
உரிய பரமுமுன் னேதுஞ் சிவமும்
அரிய துரியமேல் அகிலமும் எல்லாந்
திரிய விழுங்குஞ் சிவபெரு மானே.

2010

அணுவுள் அவனும் அவனுள் அணுவுங்
கணுவற நின்ற கலப்ப துணரார்
இணையிலி யீசனவ னெங்கு மாகித்
தணிவற நின்றான் சராசரந் தானே.

2543

மாயை மறைக்க மறைந்த மறைப்பொருள்
மாயை மறைய வெளிப்படும் அப்பொருள்
மாயை மறைய மறையவல் லார்கட்குக்
காயமும் இல்லைக் கருத்தில்லை தானே.

2956

மனமாயை மாயைஇம் மாயை மயக்க
மனமாயை தான்மாய மற்றொன்று மில்லை
பினமாய்வ தில்லை பிதற்றவும் வேண்டா
தனையாய்ந் திருப்பது தத்துவந் தானே.

2957

மலமில்லை மாசில்லை மானுபி மானங்
குலமில்லை கொள்ளுங் குணங்களு மில்லை
நலமில்லை நந்தியை ஞானத்தி னாலே
பலமன்னி யன்பிற் பதித்துவைப் போர்க்கே.

2290

மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே.

அருணோதயத்தால் இருள் நீங்குதல்போல சிவ ஞானப்பிரகாசத்தால் பாசவிருள் தொலைய உலகம் மறைந்துபோ மென்பதை இவை முதலிய திருவாக்கு களால் செவ்வனே வுணர்க.

(நா—ம்) சத்து சித்தான சிவம் அத்வைத மெனவும், அசத்து சடமான வுலக வடிவ துவைதம் சூனியமெனவும், இவ்வனுபவ நிலையைச் சீவான்மா அனுபவிப்பனெனவும், சீவன் சிற்சட வடிவமென வுங் கூறினதாம்.

---

(அ—கை.) முற்கூறிய ஏழு சூத்திரங்களினாலும் இதோபதேசமாகப் பஞ்சாட்சரத்தின் பொருளை விளக்கஞ் செய்தனர். இச்சூத்திரத்தில் சித்தசுத்தி முதலான சாதனங்கள் பூரணமான தபசுடையவனாய் முத்தி விருப்பமுள்ள சீடனுக்கு ஞானசாரியர் சம்பிர தாய முறையாக வுபதேசித்து அவ்வுபதேசத்தினால் சீடன் மலபந்தம் விடுபட்டு சிவசொருபத்தை (திரு வடியை) அடையுங் கிரமத்தைக் கூறுகின்றார்.

## எட்டாஞ் சூத்திரம்.

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதற் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்த
டன்னிய மின்மையி னரன்கழல் செலுமே. [விட்

(இ—ள்.) தவத்தினில் = அனேக சனனங்களில் செய்த நிஷ்காம புண்ணியத்தினுல் சித்த சுத்தி இருவினை ஒப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் என்னும் சாதனங்கள் பூரணமான தபசுடைய அதிதீவிர முத்தி விருப்புள்ளவனது தவத்திற் கிரக்கமுற்று.

தம் முதல் குருவுமாய் = மாணிக்கவாசகருக்கு வந்தது போல முதல்வனே குருமூர்த்தியாக வந்து அல்லது சீடன் சரணமடையப்பட்ட குருவின் சரீரத்தில் அதிட்டித்திருந்து,

ஐம்புல வேடரின் வளர்ந்து அயர்ந்தனை என= (விதிப்படி சரணமடைந்த சீடனை கிருபையோடு நோக்கி) பஞ்சேந்திரியங்களாகிய வேடரின் சம்பந்தத்தால் நீ உனது எதார்த்த சொரூப சாட்சியாகிய சிவ ஸ்வரூபத்தை மறந்து மாருய்ப் பசுத்தன்மையுடைய சீவனென் றுறுதிகொண்டு பஞ்சபூத காரியமாகிய தேகேந்திரியாதிகளில் நான் எனது என்னும் அகந்தை மமதைகளினுல் சனன மரணப் பிரவாகத்தில் மூழ்கிச் சம்சாரத்தை விருத்திசெய்து வருந்தினுய்.

(என்று பந்தம் விருத்தியான வகையைக் கூறி இனி பந்தம் விடுபடு முபாய முபதேசிக்கின்ருர்).

உணர்த்த=நீ (துவம்) எனும் பதத்தின் வாச்சியார்த்தமான கலப்புப் பொருளில் (விசிஷ்டப் பொருளில்) முக்கியார்த்தமான அசத்து சடம் துக்கரூப தேகேந்திரியாதிகளை ஆத்மாவல்லவென்று தள்ளி இலட்சியார்த்தமான சத்து சித்தானந்த ரூப சாட்சியாகிய சிவமே யான்மா, அதுவே உனது நிஜ சொரூபமென்று உபதேசிக்க,

விட்டு = ஞானசாரிய ருபதேசித்தப் பிரகாரம் தேகேந்திரியாதிகளில் ஆன்மாவென்னும் புத்தியை விசார திருஷ்டியினால் விடுத்து,

அன்னியமின்மையின் = விசாதீயமான அன்னிய விருத்தியின்மையினால்,

அரன் கழல் செலுமே = சாட்சியாகிய சிவமே நான் என்னும் சிவோகம் பாவனையாகச் சசாதீய விருத்திப் பிரவாகமாகிய அனன்யயோகத்தை அப்பியாசிப்பவனாய் தத்பத இலட்சியப் பொருளாகிய சிவ சொரூபத்தை (திருவடியை) அடைவன்.

(வி—ம்) உணர்த்த என்றதால்:- ராஜகுமாரனிடத்து ஆரோபித வேடத் தன்மையை நீக்கி ராஜ புத்திரனென் றறிந்தாற்போல் தேகேந்திரியாதிகளில் ஆத்மாபோற் றோற்றிய ஆரோபித ஆத்ம புத்தியை நீக்கி அறிவாய் சாட்சியாய் விளங்குகின்ற சிவமே நின் நிஜஸ்வரூபமென் றறிவாய் என்றுபதேசித்தனர்.

மேலும் வாச்சியார்த்தத்தில் முக்கியார்த்தமான வியஷ்டி சமஷ்டி சரீரங்கள் தள்ளத்தக்கது. இலட்சியார்த்தமான பிரத்தியக் சொரூபமாகிய சிவம் தள்ளத் தகாதது.

(திருட்டாந்தம்) வீட்டிலுள்ள பதார்த்தங்கள் தள்ளத்தக்கன. அவ்வீட்டிலுள்ள ஆகாயம் தள்ளப் படாது சேடித்திருப்பதுபோ லறிக.

அரன் கழல் செலுமே என்றதால்:- ஞானசாரியர் உபதேசித்த (அது நீயாயிருக்கிறாய்) என்னும் மகா வாக்கியார்த்தத்தைச் சையுக்தியினால் விசாரித்து

மனனஞ்செய்து முன் இதோபதேசத்திற் கூறிய 'நம' என்னும் இருவட்சரப் பொருளாகிய தேகேந்திரியாதி பாசங்களை ஆன்மா வல்லவென்று தள்ளிப் பிரத்தியக் சாட்சியாகிய சிவமே நான் என்னும் நிச்சய புத்தியினால் சிவாயவென்னும் மூன்றட்சரப் பொருளான சிவோகம் பாவனையுடையவனாய் அனன்யயோகத்தை அனுசந்தானஞ் செய்வன் எனக் கொள்க.

(அது நீ ஆனாய்) என்னும் குருவுபதேச வாக்கியத்தின் பொருள் சிவமே நான் என்னும் ஐக்கியமாம். அவ் வைக்கிய ஞானத்தை ஐயம் திரிபறக் கீழ் கூறப் படும் திருமூலர் திருவாக்குப் பிரமாணமாகக் காண்க.

### திருமந்திரம் 1585

பத்தியும் ஞானவை ராக்கிய மும்பர
சித்திக்கு வித்தாஞ் சிவோகமே சேர்தலான்
முத்தியின் ஞான முளைத்தலால் அம்முளை
சத்தி யருள்தரில் தானெளி தாமே,

### 1578

சுத்த சிவன்குரு வாய்வந்து தூய்மைசெய்
தத்தனை நல்கருள் காணு அதிமூடர்
பொய்த்தகு கண்ணுன் நமரென்பர் புண்ணியர்
அத்தன் இவனென் றடிபணி வாரே.

### 2066

ஏறு நெறியே மலத்தை எரித்தலால்
ஈறில் உரையால் இருளை யறுத்தலான்
மாறிற் பசுபாசம் வாட்டலால் வீடுகூ
கூறு பரனே குருவாம் இயம்பிலே.

2570

ஆகிய வச்சோயந் தேவதத் தன்னிடத்
தாகிய விட்டு விடாத விலக்கணைத்
தாருப சாந்தமே தொந்தத் தசியென்ப
ஆகிய சீவன் பரன்சிவ ஞமே.

2501

செற்றிடுஞ் சீவ வுபாதித் திறனேழும்
பற்றும் பரோபாதி ஏழும் பகருரை
உற்றிடுங் காரிய காரணத் தோடற
அற்றிட வச்சிவ மாகும் அணுவனே.

2853

சிந்தைய தென்னச் சிவனென்ன வேறில்லை
சிந்தையி னுள்ளே சிவனும் வெளிப்படுஞ்
சிந்தை தெளியத் தெளியவல் லார்கட்குச்
சிந்தையி னுள்ளே சிவனிருந் தானே.

2999

சித்தஞ் சிவமாய் மலமூன்றுஞ் செற்றவர்
சுத்தச் சிவமாவர் தோயார் மலபந்தங்
கத்துஞ் சிலுகுங் கலகமுங் கைகாணர்
சத்தம் பரவிந்து தானுமென் றெண்ணியே.

2351

மண்ணொன்று தான்பல நற்கல ஞயிடும்
உண்ணின்ற யோனிகட் கெல்லாம் ஒருவனே
கண்ணொன்று தான்பல காணுந் தனைக்காணு
அண்ணலும் அவ்வண்ண மாகிநின் றனே.

2017

சீவ னெனச்சிவ னென்ன வேறில்லை
சீவ னார்சிவ னாரை யறிகிலர்
சீவ னார்சிவ னாரை யறிந்தபின்
சீவ னார்சிவ னாயிட் டிருப்பரே.

(தா—ம்) "அது நீ" என்னும் இரு பதத்தின் இலட்சியார்த்தமான சச்சிதானந்தமே உனது நிஜ ஸ்வரூபமென்னும் ஐக்கிய ஞானத்தை ஞானாசாரிய ருபதேசித்தனர் எனக் கூறினதாம்.

---

(அ—கை) ஞானாசாரியரா லுபதேசிக்கப்பெற்ற பதிஞானம் திடமாமாறு சீடன் 'நம' வெனும் பதப் பொருளான தேகேந்திரியாதி பாசங்களைக் கானல் சலம்போல் மித்தையென் றறிந்து சமாதி யப்பியாசஞ் செய்யு முபாயத்தைக் கூறுகின்றார்.

## ஒன்பதாஞ் சூத்திரம்

*ஊனக்கண் பாச முணராப் பதியை*
*ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி*
*உராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத்*
*தண்ணிழலாம் பதிவிதி எண்ணுமஞ் செழுத்தே.*

(இ—ள்) ஊனக்கண் பாசம் = மாம்ச மயமான தேகாதிகளில் நான் எனதென்னும் அகந்தை மமதை யுள்ளவனு யறிகின்ற பசு ஞானமும், பாச ஞானமும், அபர ஞானமாம். அவ் வபரஞானத்தினுல்,

உணராப் பதியை அறியக்கூடாத சச்சிதானந்த பதியாகிய சிவ சொரூபத்தை,

ஞானக் கண்ணினில் = அருட்கண்ணொளியாகிய அகண்டாகார விருத்தி ஞான நேத்திரத்தினுல் (பரஞானத்தினுல்).

சிந்தை நாடி=இருதயத்தில் தன் நிஜ சொருப சாட்சியாகிய பிரத்தியகாத்மாவே சிவ சொரூபம் என சாட்சாத்காரமாக வறிந்து,

உராத்துணைத் தேர்த்தென = கானலானது தண்ணீரோடுவதுபோலத் தோற்றினும் அதனைப் பொய்த்தோற்றமென வறிந்து தண்ணீருணர்ச்சியினை விடுவதுபோல,

பாசம் ஒருவ=தேகாதி வுலகவடிவப் பாசமாகிய பொய்ப்பொருளையறியும் அகந்தை மமதை யுணர்ச்சிகளை விடுத்து,

தண்ணிழலாம் பதி=முத்தாப முதலியவற்றைத் தணிக்குஞ் சாந்தமாயும், சுக சொரூபமாயும், அருட் சோதி மயமாயுமுள்ள பதியை.

விதி எண்ணும் அஞ்செழுத்து=பதிஞானந் திடமாகும் வண்ணம் குருவருளிய நியமமாக சிவோகம் பாவனையுடையவனாய்ப் பஞ்சாட்சர மகாமந்திரத்தை இடையறாது சிந்திப்பன் (சமாதியப்பியாசஞ் செய்வன்).

(வி—ம்.) ஞானக் கண்ணினில் சிந்தை நாடி என்றதால்:- பாசம் நித்தியமென்னும் புத்தி நீங்க மித்தையாத்துவ புத்தி வரும். அப்புத்தி வர பரம் பொருள் விளங்கும். அதனைப் பரஞானமென்பர். அப்பரஞான திருஷ்டியினால்,

பாசம் ஒருவத் தண்ணிழலாம் பதி விதி எண்ணும் அஞ்செழுத்தே என்றதால்:- பொய்ப் பொருளுக்கு மெய்ப் பொருளே சொரூபமாம்.

மெய்ப்பொரு ளின்றிப் பொய்ப் பொருள்களின் தோற்றமுள தாகாதென்னும் நிச்சய புத்தியினால் பொய்ப்பொருளான பாசங்களை மறந்து மெய்ப் பொருளான பதியைப் பாவித்துப் பஞ்சாட்சர சிந்தனை செய்வனென்பதாம்.

(அல்லது) பாசத்தைக் காரியமென்றுங் காரண மென்றுங் கூறுவர். அவற்றில் உற்பத்தியுள்ள காரிய பாசம் காலத்தாலும் அநாதியாயுள்ள காரண பாசம் ஞானேயத்தாலும் அழிகின்றதனால், அவ்விரு பாச மும் அநித்தியமாம்.

அவ்வநித்திய பாசங்கட்கு நித்தியமான சிவ சொரூபமின்றி இருப்பும் தோற்றமும் சம்பவியா தெனவுணர்ந்து அநித்தியபாசத்தை மறந்து நித்தியமா யுள்ள பதியைப் பாவித்துப் பஞ்சாட்சர சிந்தனை செய்வனெனவும்மேலும், பதி சத்து சித்து ஆனந்த மென ஆசாரிய ருபதேசித்த பிரகாரம் நிச்சயமுள்ளவ னுய்த் தூலமான நாம ரூபங்களை நோக்கி அவற்றிற்கு ஆதாரமாகக் கலந்திருப்பது சச்சிதானந்தமாகிய பதி யெனப் பாவித்துப் பஞ்சாட்சர சிந்தனைசெய்தல் தூல பாவனையெனவும் நாம ரூபங்கள் பொய்யென்பதை சையுக்தியினால் நிச்சயித் துணர்ந்து சச்சிதானந்த பதியே மெய்யென்று பாவித்துப் பஞ்சாட்சர சிந்தனை செய்தல் சூட்சும பாவனையெனவும்,

பொய்ப்பொருளான நாம ரூபங்களைப் பொய் யென் றுணர்ந்த வாசனையும் மறந்து, சச்சி தானந்த பரிபூரண சிதாகாயமே பதியெனப் பாவித் தப் பாவனையும் பஞ்சாட்சர சிந்தனையும் ததாகார மாதல் காரண பாவனையெனவுங் கூறுவர்.

இதற்குப் பிரமாணமாக முகவுரையில் பஞ்சாட்சர விளக்கத்தில் கூறியுள்ள பாவனைப் பகுப்பையுங் காண்க.

இவ்விதம் மனதின் பரிபாகத்துக்குத் தக்கவாறு பதியின் பாவனையும் பஞ்சாட்சர சிந்தனையு முளதாமென வறிக. மேலும், பஞ்சாட்சரத்தில் 'நம' வெனுமிருவட்சரப் பொருளான பாசத்தை மறத்தற்கான வுபாயத்தையும், 'சிவாய' வெனும் மூன்றட்சரப் பொருளான சிவோகம் பாவனையில் சித்தம் நிலைத்தற்கான வுபாயத்தையும் ஞானாசாரியர் முகமாக வுணர்ந்து சிந்தனை செய்க.

பாவனை, சிந்தனை, அப்பியாசஞ் செய்யும் முறையில் திருமூலர் வாக்குங் காண்க.

திருமந்திரம் 2775

அம்பல மாவ தகில சராசரம்
அம்பல மாவது ஆதிப் பிரானடி
அம்பல மாவது அப்புத்தீ மண்டலம்
அம்பல மாவது அஞ்செழுத் தாமே.

2291

ஆரு றகன்று நமவிட் டறிவாகி
வேருன தானே யகாரமாய் மிக்கோங்கி
ஈருர் பரையின் இருளற்ற தற்பரன்
பேருர் சிவாய அடங்கும்பின் முத்தியே.

2525

பதமுத்தி மூன்றும் பழுதென்று கைவிட்
டிதமுற்ற பாச இருளைத் துரந்து
மதமற்றெ னதியான் மாற்றிவிட் டாங்கே
திதமுற்ற வர்கள் சிவசித்தர் தாமே.

1437

ஒன்றும் இரண்டும் இலதுமாய் ஒன்ருக
நின்று சமய நிராகார நீங்கியே
நின்று பராபரை நேயத்தைப் பாதத்தாற்
சென்று சிவமாதல் சித்தாந்த சித்தியே.

2294

ஐயைந்து மட்டுப் பகுதியும் மாயையும்
பொய்கண்ட மாமாயை தானும் புருடன்கண்
டெய்யும் படியாய் எவற்றுமாய் அன்ருகி
உய்யும் பராவத்தை யுள்ளுறல் சுத்தமே.

2334

தொழிலிச்சை ஞானங்கள் தொல்சிவ சீவர்
கழிவற்ற மாமாயை மாயையி ஞகும்
பழியற்ற காரண காரியம் பாழ்விட்
டழிவற்ற சாந்தாதீ தன்சிவ ஞமே.

வள்ளலார் அருளிச்செய்தது வருமாறு

பாவனு தீதந் தன்னி னுடொறும் பதிந்து நிற்பாய்
பாவனு தீதந் தன்னி னெஞ்சகம் பதியா தாயின்
பாவனை தனிலே நெஞ்சைப் பழக்கிடு பழுத்த காலே
பாவனு தீதம் வந்து பதிந்திடும் பான்மை யோடே.

சிந்தனை புறஞ்செலாச் சிவோகம் பாவனை
சந்தத மூனுற்றிடிற் சமாதி வந்துறு
மந்தநற் சமாதியா லறிவு மேலிடு
மிந்தநன் னிலையிலே யிருக்கற் பாலையே.

மக்களு மனையு நீத்து மாதரா ராசை நீத்து [றிச்
சொர்க்கமே லாசை நீத்துச் சுத்தனுய்ப் பற்றேன் றின்
கற்கமேண் டியது நீத்துக் கருதிரு வினையு நீத்து
நிற்குண சிவந்தா னுகி நிற்பது ஞான நிஷ்டை.

(தா—ம்.) ஞாநாசாரிய ருபதேசித்தக் கிரமமாய்ச் சிவோகம் பாவனையுடையவனுய்ப் பஞ்சாட்சர சிந்தனையுள்ளவனுய் சவிகல்ப சமாதி அல்லது நிர்விகல்ப சமாதி அப்பியாசஞ் செய்வனெனக் கூறியதாம்.

---

(அ—கை.) முற்கூறியவண்ணம் ஞானப்பியாசம் முதிர்ச்சியாகப் பிரதிபந்தமில்லாமல் அபரோட்சமாகச் சிவஞானம் பெற்ற சீவன்முத்த னியல்பைக் கூறுகின்றார்.

## பத்தாஞ் சூத்திரம்.

அவனே தானே யாகிய வந்நெறி
ஏக னாகி இறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.

(இ—ள்) அவனே தானேயாகிய= அப்பியாசம் முதிர்ந்து அருட்சத்தி பதிந்து சிவமே தானகப்பெற்ற,

அந்நெறி=அவ்வனுபவத்தினால்,

ஏகனுகி=சிவசொரூபத்தில் ஒருமை (ஐக்கியம்) அடைந்தவனான சீவன்முத்தன்,

இறைபணி நிற்க = அத்வைதமான சிவசொருபத்தில் ஸ்திதி பெற்று சிவானந்தானுபவமுள்ள சமாகிதனுகியும், பகிர்முகமுள்ள உத்திதனுயு மிருக்கின்றான் ஆகலின்,

மலமாயை தன்னொடு வல்வினை யின்றே = சிவசொருபத்தில் ஸ்திதி பெற்ற சீவன்முத்தன் சிவஞான

திருஷ்டியாகிய ஞானக்கினியால் ஆணவாதி மலங்கள் முழுவதும் தங்கப்பட்டமையால் மும்மலங்களு மில்லாதவனே யாவன்.

(வி—ம்) ஏகனுகி இறைபணி நிற்க என்றதால்:- சிவமே தானெனுஞ் சுவானுபவமுள்ள சீவன்முத்தன் சிவசொரூபத்தில் அபேதமா யிருத்தலே இறைவன் பணியாம்.

சிதாகாயமே சிவம்; சித்தம் சிதாகாயத்தில் ஸ்திதி பெற்றுச் சிவானந்தம் அனுபவித்தல் அபேதமா யிருத்தலாம்.

மேலும், ஆணவம், மாயை, கன்மம் மும்மலமும் தேகத்தினுள் சாட்சியாகிய சச்சிதானந்தம் விளங்காமல் மறைப்பன.

திரோதாயி, மாயேயம் என்னு மிருமலமும் தேகத்துக்கு வெளியில் சச்சிதானந்தம் விளங்காமல் மறைப்பன. இப் பஞ்ச மலங்களும் இறைவன் அருளால் நாசமாய்விட்டதால் உள்ளும் புறம்பும் ஒரே சச்சிதானந்தமாய்த் தன்னனுபவத்தில் நிற்றலே ஏக ஞகி இருத்தலாம்.

மலமாயை தன்னெடு வல்வினை யின்றே என்று மும்மலத்தைக் கூறியதால் மற்ற இருமலங்களு மிலவாமென் றுணரவும்.

சூரியன் விளங்க இருள் நாசமாவதுபோல எல் லாஞ் சிவமாக விளங்குதலால் மலங்கள் நாசமாயிற் றென்றே கொள்க.

மலங்க்ள் மித்தையாலட்சண முள்ளதானதால் சிவஞானத்தால் நாசமாயிற்றென வறிக.

யாது யாது மித்தையோ அதுவது ஞானத்தால் நிவர்த்திக்கத் தக்கதாம். சுத்திகா ரஜதம் போல என்பது முதலிய திருட்டாந்தங்களால் யூகித்துணர்க.

வல்வினையின்றே என்பதிலுள்ள ஈற்றேகாரம் மலமாகிய பாசம் நாசமாயிற்றென்னும் நிச்சயப் பொருட்டாம். அல்லது திருட்டாந்தத்தில் அதிட்டானம் அறியப்பட்டபோது ஆரோபம் அதிட்டான வடிவமே என்று காண்பதுபோல தாட்டாந்தத்திலும் நிச்சயிக்கும் பொருட்டாம்.

அன்றியும், பிரகாசத்தினால் இருள் நாசமாயிற்றே தவிர விலகினதன்று. அதுபோல் ஞானத்தினால் பாசம் நாசமாயிற்றே தவிர விலகினதல்லவென்றுணர்க.

மேலும், சச்சிதானந்த சிவம் சிவமே தான் என அனுபவிக்குஞ் சிவஞானிக்குத் தன்னனுபவத்தில் மலம் இருந்தது நீங்கிற்று என்னுஞ் சிந்தையுமில்லையென வுணர்க.

மேலும், சீவனுக்கு மலமுள்ளவரையில் பசுவென்றும், மலம் நாசமான பின்னர் முத்தன் என்றும் பெயராம்.

சிவசொரூபத்தில் அபேதமாய் ஆனந்தமனுபவிக்குஞ் சீவன்முத்தனை, சிவத்தை யறிந்தவன் சிவமேயாகின்றான் என்றும், சிவத்தை யறிந்தவன் சிவத்திலிருக்கின்றான் என்றும் ஞானநூல்கள் கூறுகின்றன.

எப்போது சிவஞான முதயமாயிற்றோ அப்போதே மலபந்தமும், பசுத்தன்மையும் நாசமுற்று முத்திபெற்றவனாவன்.

(மெய்யேயுன் பொன்னடியைக் கண்டின்று வீடுற்றேன்) என்னுந் திருவாக்கினல் ஞானிக்குத் தேகம் நீங்கியபின்னரடையும் முத்திநிலை எதுவோ அதனைச் சிவஞான முதயமானபோதே அடைந்தவன் என்றும்,

(சித்தமல மறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட) என்னுந் திருவாக்கினல் இறைவன் சித்தமலத்தைப் போக்கிச் சிவமாக்கிய பின்னர் பாசம் பசுத்தன்மை யின்றிச் சிவச்செயலாக விளங்குஞ் சீவன்முத்தன் சிவமே என்றும் அறிக.

சிவஞானிகளின் நிலையைக் கூறுந் திருமூலர் திருவாக்குகளையு முணர்க:

திருமந்திரம் 2659

கருடன் உருவங் கருதும் அளவிற்
பருவிடந் தீர்ந்து பயங்கெடு மாபோல்
குருவின் உருவங் குறித்தஅப் போதே
திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே.

2314

தானே சிவமான தன்மை தலைப்பட
ஆன மலமு மப்பாச பேதமும்
மான குணமும் பரான்மா வுபாதியும்
பானுவின் முன்மதி போற்பட ராவே.

2289

பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்
பொன்னின் மறைந்தது பொன்னணி பூடணம்
தன்னை மறைத்தது தன்கர ணங்களாம்
தன்னின் மறைந்தது தன்கர ணங்களே.

2611

தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பர்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனரு ளாலே.

2539

சிவமான சிந்தையிற் சீவன் சிதைய
பவமான மும்மலம் பாறிப் பறிய
நவமான அந்தத்தினன் நற்சிவ போதந்
தவமா மவையாகித் தானல்ல வாகுமே.

(தா—ம்.) சிவஞானியாகிய சீவன்முத்தன் சமாகிதனையும், உத்திதனையுமிருப்பன் பகிர்முகமாகக் கர்ம பிரவிருத்தியுள்ள காலத்தில் சிவன் வசமான விருத்தியுடையவனுய்ச் சிவச்செயலாக விவகரிப்பன் என்று சீவன் முத்தனியல்பைக் கூறினதாம்.

---

(அ—கை.) சீவன்முத்தன் அருவமனது பாலில் ஜலம்போல சிவ சொரூபத்தில் நிலைத்து ஆனந்தம் அனுபவிக்கும் பராபக்தியினைக் கூறுகின்றூர்.

## பதின்மூராஞ் சூத்திரம்

காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போல்
காண வுள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா வன்பின் அரன்கழல் செலுமே.

(இ—ள்) காணும் கண்ணுக்கு = உருவங்களைக் காண்கின்ற நேத்திரத்திற்கு,

காட்டும் உளம்போல் = காட்டுவானும், காண்பானும் ஆன்மாவாம். அதுபோல,

காண உள்ளத்தைக் காட்டலின் = அஞ்ஞாதமாகவும் ஞாதமாகவும் காணும்படி சீவான்மாவுக்கு அருளால் அறிவிப்பானும், அறிவானுஞ் சிவனென்று,

கண்டு= இவ்வாறாக சோதிசொரூபஞானவொளியாகிய சிவத்தினால் ஆன்மா அறிகின்றான் சுதந்தரமாயில்லை என்னும் உண்மையினை யுணர்ந்திருக்குஞ் சீவன்முத்தன்.

அயரா அன்பின் = அருளை நினைந்து நழுவுதலின்றிய இடையறாத அனன்ய அன்பாகிய பராபக்தியினால்,

அரன் கழல் செலுமே= சிவன் திருவடியில் (சிவசொரூபத்தில்) ஸ்திதி பெற்று நிராவரண பரிபூரண விருத்தியுள்ளவனாய்ச் சிவானந்த மனுபவிப்பன்.

(விசேடம்) அயரா அன்பு என்றதால்:- சீவன் முத்தனது அருவ சித்தத்தின் நிராவரண பரிபூரண விருத்திப் பிரவாகத்தை அயரா அன்பு என்றும், அன்புருவான சித்தமென்றுங் கூறுவர்.

அரன் கழல் செலுமே என்றதால்:-சீவன்முத்தன் அருவசித்தம் பராபக்தியினால் பாலில் நீர்போல் சிவாகாரமாய் நிலைத்து சிவானந்த மனுபவிப்பன்.

பிராரப்த முடிவில் அன்புருவான அருவ சித்தமும் சிவ சொரூபத்தில் இரும்புண்ட நீர்போ லடங்கும்.

ஆன்மா பாலில் பால்போல சிவசொரூபத்தில் அபேதமாம், இதுவே திருவடி முத்தி, அதாவது மீண்டு பிறத்தலின்றி ஆனந்தமாய் நிலைத்தல்.

இம்முத்தி சீவன்முத்தி சித்தித்தவனுக்கு பிரயத்தனமின்றியே அடையப்படும்.
அரன் கழல் செலுமே என்பதினீற்றேகாரம்:- அரன் திருவடியில்அபரா அன்புள்ள சீவன்முத்தன் மனதில் அந்நிய விருத்தியுளதாகாதென விச்சயிக்கும் பொருட்டாம்.

அத்தன்மைய சீவன்முத்தனை இன்னது அனுஷ்டிக்க வேண்டுமென்று ஞானநூல் விதிக்கவில்லை.

அன்றியும், சீவன்முத்தி சித்திப்பதற்கு வேண்டிய சாதனங்களை விதிப்படி யனுஷ்டித்து சீவன்முத்தி பெற்றவன் பின்னரும் அனுஷ்டிக்கவேணுமென்ருல் † பிஷ்ட பேஷண நியாயமாம்.

சீவன்முத்தனுக்கு நிஷ்காம புண்ணிய மிகுதியால் பாப சம்ஸ்காரம் நீங்கி இருத்தலால் நிஷித்த காரியத்தில் பிரவிருத்தி யுளதாகாது அவன் மனோவாக்கு காயங்கள் லோகோபகாரமாய் இதஞ்செய்யுங் கருணையினுல் விதியிலேயே பிரவிருத்திக்குமென வறிக.

சீவன்முத்தன் அருவ சித்தம் அன்பே சிவமாகக் கரைந்து ஆனந்த மயமாயடங்கும் இதுவே சித்தாந்தமாம். (சித்த = சித்தத்தின்) அந்தம் = முடிவு) சித்தாந்தமாம்

கூறியவற்றிற்கு உதாரணம் திருமூலர் திருவாக்கு வருமாறு :

திருமந்திரம் 138

திருவடி யேசிவ மாவது தேரில்
திருவடி யேசிவ லோகஞ் சிந்திக்கில்
திருவடி யேசெல் கதியது செப்பில்
திருவடி யேதஞ்சம் உள்தெளி வார்க்கே.

---

† அறைத்த மாவை மீண்டும் அறைதல் 'பிஷ்ட பேஷண' நியாயமாம்,

2401

அஞுதி சீவனேம் மலமற் றப்பாலாய்
அஞுதி யடக்கித் தனேக்கண் டரஞய்த்
தஞுதி மலங்கெடத் தத்துவா தீதம்
விஞவுநீர் பாலாதல் வேதாந்த வுண்மையே.

2357

அறிவு வடிவென் றறியாத என்னே
அறிவு வடிவென் றருள்செய்தான் நந்தி
அறிவு வடிவென் றருளால் அறிந்தே
அறிவு வடிவென் றறிந்திருந் தேனே.

2440

அணுவும் பரமும் அசிபதத் தேய்ந்து
கணுவொன் றிலாத சிவமுங் கலந்தால்
இணையறு பால்தேன் அமுதென இன்பத்
துணேயது வாயுரை யற்றிடத் தோன்றுமே.

2592

இரும்பிடை நீரென என்னேயுள் வாங்கிப்
பரம்பர மாள பரமது விட்டே
உரம்பெற முப்பாழ் ஒளியை விழுங்கி
இருந்தஎன் நந்தி இதயத்து ளானே.

2588

உடலும் உயிரும் ஒழிவற ஒன்றிற்
படருஞ் சிவசத்தி தாமே பரமாம்
உடலைவிட் டிந்த உயிரெங்கு மாகிக்
கடையுந் தலேயுங் கரக்குஞ் சிவத்தே.

766

அண்ணல் இருப்பிட மாரும் அறிகிலர்
அண்ணல் இருப்பிடம் ஆய்ந்துகொள் வார்களுக்
கண்ணல் அழிவின்றி உள்ளே அமர்ந்திடும்
அண்ணலேக் காணில் அவனிவ ஞகுமே.

2587

அழிகின்ற சாயா புருடனைப் போலக்
கழிகின்ற நீரிற் குமிழியைக் காணில்
எழுகின்ற தீயிற்கர்ப் பூரத்தை யொக்கப்
பொழிகின்ற இவ்வுடற் போமப் பரத்தே.

வள்ளலார் சாத்திரம்.

தானே சிவமான சத்தியஞா ஞானந்த
மோனநிலை சொல்காழி முன்னோனே—ஞானிகடம்
உள்ளமா காயமா யொன்றாய வானந்த
வெள்ளமாய் நிற்குமவர் மெய்.

என்று ஆன்றோர் கூறிய வாக்குகளாலு முணர்க.

அனன்ய பக்தி, அன்பே சிவம், ஐக்கிய ஞானம், பராபக்தி என்னுஞ் சொற்கள் பேதமாம். அவற்றின் பொருளொன்றே.

(தா—ம்.) நன்றி யறிந்தவனான சீவன்முத்தன் தனக்கு அருளா லுபகரித்த சிவன் திருவடியில் பராபக்தி யுள்ளவனாய் ஆனந்த மனுபவிப்பனெனக் கூறினதாம்.

---

(அ—கை) இந்நூலிற் கூறிய சிவஞானம் பெற்றுத் திருவடி யடையும்பொருட்டு முத்தி விருப்பமுடைய அதிகாரி (சாதக) புருடனுக்கு வேண்டிய சாதனங்களை இதிற் கூறுகின்றார்.

## பன்னிரண்டாஞ் சூத்திரம்

செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
இம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரனெனத் தொழுமே.

(இ—ள்.) செம்மலர் நோன்றாள்=சிவந்த தாமரை மலர்போன்ற திருவடியை (சீர்பாதத்தை),

சேரல் ஒட்டா = அடையவொட்டாமல் பிரதி பந்தமாய்த் தடுக்கின்ற

அம்மலங் கழிஇ=ஆணவாதி மலங்களை ஞானத்தால் போக்கி முத்தியின்ப மடையும் பொருட்டு அதிகாரி புருடன்,

அன்பரொடு மரீஇ = திருநீறு, உருத்திராக்கம் முதலியன வணிந்து சிவபெருமானிடத்து அன்பு பூண்ட சத்துக்களைச் சார்ந்து (இவர் அவர் என்று)

மாலற=மயங்காமல் (சம்சயமின்றியவனாய்),

நேயமலிந்து=அவர்களிடத் தன்பு மிகுந்து,

அவர் வேடமும் = அச்சிவனடியார்களின் மெய் வேடங்களையும்,

ஆலயந் தானும்=சிவாலயங்களையும்

அரன் எனத் தொழுமே = சிவமாகவே வணங்குவன்.

(வி—ம்) அம்மலம் என்றது:- முற்கூறிய ஆணவாதி மலங்களை.

அன்பரொடு மரீஇ என்றதால்:- பராபக்தியுள்ள சிவஞானிகளாகிய சாதுக்களை முத்தி விருப்பமுள்ளவன் சேர்தலெனக் கொள்க.

மலிந்தவர் வேடமும் என்றதால்:- சாதுக்களிவர்களென்னக் காணக்கூடாமையின் அவர்கள் தரித்துள்ள வேடங்களைக் கண்டவுடனே சிவனடியார்களான சாதுக்களென்றே வழிபடவேண்டுமெனக் கொள்க.

மெய்ப்பொருள் நாயனார் போலும், வல்லாள மகாராஜன் போலும் வறிக.

அரன் எனத் தொழுமே என்றதால்:— சிவனடியார்களையும், ஆலயங்களையும் பரமசிவம் என்னுஞ் சிந்தையுடன் வணங்கவேண்டு மென்பதாம்.

ஞான சிவாசாரியர், சிவலிங்கம், சிவனடியார்களான குருலிங்க சங்கமங்களை வழிபடுக எனலுமாம்.

சிவஞானம் பெற விரும்புஞ் சாதகர்கள் இதிற் கூறிய சாதனங்களை அனுஷ்டிக்கவேணுமென்பதற்கு ஆன்றோர் திருவாக்குகள் வருமாறு:

திருமந்திரம் 2327

அறிவிக்க வேண்டாம் அறிவற் றயர்வோர்க்கும்
அறிவிக்க வேண்டாம் அறிவிற் செறிவோர்க்கும்
அறிவுற் றறியாமை யெய்திநிற் போர்க்கே
அறிவிக்கத் தம்மறி வாரறி வோரே.

2615

ஆசை யறுமின்கள் ஆசை யறுமின்கள்
ஈசனோ டாயினும் ஆசை யறுமின்கள்
ஆசை படப்பட ஆய்வருந் துன்பங்கள்
ஆசை விடவிட ஆனந்த மாமே.

1445

நாடு நகரமும் நற்றிருக் கோயிலுந்
தேடித் திரிந்து சிவபெரு மான்என்று
பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின்
கூடிய நெஞ்சத்துக் கோயிலாய்க் கொள்வனே.

1446

பத்தர் சரிதை படுவோர் கிரியையோர்
அத்தகு தொண்டர் அருள்வேடத் தாகுவோர்
சுத்த வியமாதி சாதகர் தூயோகர்
சித்தர் சிவஞானஞ் சென்றெய்து வோர்களே.

2106

இக்காய நீக்கி யினியொரு காயத்திற்
புக்குப் பிறவாமற் போம்வழி நாடுமின்
எக்காலத் திவ்வுடல் வந்தெமக் கானதென்
றக்கால முன்ன அருள்பெற லாமே.

*வேதாந்த நூலில் கூறுகின்ற ஞானங்கம் வருமாறு:*

பூதியினு லங்கமெலா நன்ருய்ப் பூசிப்
பொருவில்திரி புண்டரமு மணிந்து கொண்டு
மாதவனே நியமமுட னுருத்தி ராக்க
மாலைகளுஞ் சிரமுதலிற் றரித்துக் கொண்டிங்
கோதியிடு முருத்திரபஞ் சாட்ச ரரதி
யுத்தமமா மந்திரமுஞ் செபித்துக் கொண்டு
நீதியுட னிகழுமகா லிங்கத் தின்க
ணித்தியமா யர்ச்சனையுஞ் செய்ய வேண்டும்.

அத்தனுடைப் பூசனைபோ லன்பர் பூசை
அனுதினமு மாதரவா யியற்ற வேண்டும்
உத்தமமா யோதியவோர் சிவத லத்தில்
வுடலுள்ள பரியந்தம் வசிக்க வேண்டும்
சுத்தம தாஞ்சிவ நாமகீர்த்த னத்தைச்
சோர்வரவே சந்ததமும் செய்ய வேண்டும்
மெத்தவுமே யுத்தமமாஞ் சாம்ப மூர்த்தி
மேனியுடை பாவனையுஞ் செய்ய வேண்டும்.

(தா—ம்) இவ்வாருக முத்தி விருப்பமுள்ள அதிகாரிகளானோர் தொடர்பாக நிரந்தரம் நேயமாயனுஷ்டித்துச் சதாசார பூர்வகமாய் மனஞ்சுத்தமாக இருவினை ஒப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் முதலிய சாதனங்கள் பூரணமாகிய தபசுடையவனுய் ஞானசிரியர் கிருபையால் இந்நூலிற் கூறிய சிவஞானம் பெற்று இறைவன் திருவடியை அடைவரெனக் கூறினதாம்.

(திருச்சிற்றம்பலம்.)

## இந்நூலின் சாரம்

சிவம் அத்வைதம், உலகம் துவைதம், அத்வைதம் மெய்ப்பொருள், துவைதம் பொய்ப்பொருள், இவ்விதம் ஆறுமுதல் பத்துவரை சூத்திரங்களால் துணியப்பெறும்.

சித்த முடிவில் சுவானுபவத்தில் விளங்கும் அத்வைதத்தை சித்த விகற்பத்தில் துணிவது சாத்தியமில்லாததாம். அத்வைத வஸ்து ஒன்று, இரண்டு, மூன்று, இரண்டற்றது கலந்திருப்பது என்னும் இவ்விதமான விவாதத்திற் கிடமாவதில்லை.

எவர் எவ்விதமாய் நிச்சயிக்கின்றனரோ அவர்கட்கு இறைவன் அவ்விதமாக விளங்குவர்.

இரண்டென்றவர்க் கிரண்டதாய் நிற்கும்,
ஒன்றென்றவர்க்கு ஒன்றதாய் நிற்கும் என்பது
ஆன்றோர்வாக்கு.

மேலும் வாக்கு மனது கோசரிக்கக்கூடாத அத்வைத வஸ்துவை ஒன்று இரண்டு என்று சொல்லக் கூடாததென்று ஞானநூல்கள் கூறுகின்றன.

இந்நூல் சுவானுபவத்தையுண்டுபண்ணும் ஞான சாஸ்திரமானதால் விவாதத்திற் கிடமில்லாமல் சுவானுபவம் விளங்கச் சுருக்கமா யுணர்த்துகின்றது. அதாவது, இறைவன் அருளால் மலங்கள் நீங்கிய சித்தம் அகண்ட விருத்தியாய்ச் சிவசொருபத்தில் பாலில் நீர்போல் அபேதமாய் நி[illegible]த்த போதுளதாஞ் சாட்சாத்காரமே திருவடி ஞானம் அதாவது சிவ ஞானம் எனவும்.

அபேதமான அகண்ட விருத்தியும் சிவானந்தத்தில் அதீதமாய் ஸ்திதி பெறுதல் திருவடி நிழல் அதாவது, சிவானந்தம் எனவும்.

*அதீதமாய் ஸ்திதிபெற்ற அருவசித்தம் சிவானந்தத்தில் கர்ப்பூர தீபம்போற் கரைந்து ஆன்மாவும் சிவமும் பாலில் பால்போல் ஐக்கியமாதல் திருவடியடையும் முத்தி அதாவது, திருவடி சேர் முத்தி எனவுங் கொள்க.*

*இவ்வாறாகச் சித்தத்தின் அந்தத்தில் உளதாகுந் திருவடி அடைதலெனும் முத்திக்கு சாட்சாத்சாதனம் பராபக்தியென்று இந்நூலிற் கூறி முடிக்கின்றார்.*

*சித்தத்தின் முடிவே சித்தாந்தமாம் ஆனதால் இந்நூலிற்குஞ் சித்தாந்த சாஸ்திரமென்னும் பெயர் அணிகலனாகச் சிறந்து விளங்குகின்றன வென்பது போற்றத்தக்கதென வுணர்க.*

*திருச்சிற்றம்பலம்.*

வாழ்க மெய்கண்டான் மலரடி யென்றுமே
வாழ்க சந்தான வழி வழியடியவர்
வாழ்க விவ்வுரை வையத்து ளோங்கியே
வாழ்க படிப்பவர் மௌனம தெய்தியே

திருச்சிற்றம்பலம்

சிவஞானபோதம் சூத்திரமும் உரையும் முடிந்தது.

ஆறிரு தடந்தோள் வாழ்க அறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்கக் குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க ஆனை தன்னணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க வாழ்க சீரடியா ரெல்லாம்

சற்குருஸ்துதி.

எம்மதத்தோ ரெவ்விதமா யியம்பிடினு மவ்வவர்க் குறிய ஞானஞ்
சம்மத மாயங்கை கனியெனப் பொருளுணர்த்திச் சகச மீந்து
மும்மலமென் மாசகற்றி முப்பாழுங் கடந்தோளிர் மூதறிவா ஞானச்
செம்மையருள் முற்க புரியாறுமுக ஞானகுரு தேவ தேவே.

சிவ சிவ சிவ சிவ

*திருச்சிற்றம்பலம்.*

சற்குரு நாதன் உபயதிருவடிகளுக்கு நமஸ்காரம்.

சுபம்! சுபம்!! சுபம்!!!